PRABHU EKAMBARAM

# LAW OF ATTRACTION

## (தமிழில்)

1. SUBCONSCIOUS MIND POWER
2. 365 POWERFUL AFFIRMATIONS
3. POWERFUL MIND EXERCISES

# LAW OF ATTRACTION(தமிழில்)

## SUBCONSCIOUS MIND POWER, POWERFUL MIND EXERCISE, 365 POWERFUL AFFIRMATIONS

Prabhu Ekambaram

வாழ்க்கையில் அடுத்த நிலைக்கு முன்னேற
வேண்டுமென்று நினைப்பவர்களுக்கு
இந்த புத்தகம் சமர்பணம்

"நீங்கள் இப்போது வாழ்ந்துக்கொண்டிருக்கும் உலகத்தை மறக்கடிக்கும் அளவிற்கு உங்கள் எதிர்கால வாழ்க்கையை கற்பனை செய்தால் அதன் மூலம் அற்புதமான வாழ்க்கை உங்களுக்கு வெளிபடும்".

# முன்னுரை: கடவுளின் தன்மை நம்முள் இருக்கிறது

நம் அனைவருக்குள்ளும் ஒரு சக்தி வாய்ந்த ஆற்றல்களின் தளம் உள்ளது. அது தான் மனிதனின் மூளை. இந்த முளையில் தான் மின் காந்த சக்தி மற்றும் ஈர்ப்பு விசை அதிகமாக உள்ளது. நாம் நினைக்கும் விஷயங்களுக்கு ஏற்ப அலைவரிசைகள் வெளி வருகின்றது.

இந்த சக்தி அல்லது ஆற்றல் தளம் மற்றவர்களுடைய மூளையிலிருந்து எண்ணங்களை பெறவும், நம் மூளையிலிருந்து எண்ணங்களை அனுப்பவும் ஆற்றல் பெற்றது. இதை தொலையுணர்வு என்று பல விஞ்ஞானிகளின் ஆராய்ச்சியின் மூலம் தெரிவிக்கின்றனர்.

நீங்கள் ஒருவரைப் பற்றி யோசிக்கும் பொழுதும், நினைக்கும் பொழுதும் அந்த எண்ணமானது காந்த சக்தியோடு இணைந்து அந்த நபரின் மூளையில் சென்று பாதிக்கின்றது அல்லது அவரை உங்களின் எண்ணம் தூண்டுகின்றது.

உதாரணமாக ஒரு கடனைப் பற்றி நினைத்து அவர் இன்று வரக்கூடாது என்று நினைத்துக் கொண்டே இருந்தால் அந்த அலைவரிசை அவரை தூண்டி உங்கள் வீட்டுக்கு வரவழைக்கின்றது.

பத்து நாட்களாக உங்கள் காதலியிடம் பேச வில்லை பேச வேண்டும் என்று தோன்றுகின்றது ஏதோ ஒரு ஞாபகத்தில் மறந்து விடுகிறீர்கள் என் றால் சிறிது நேரத்தில் உங்கள் காதலி உங்களை பார்க்க வருவார் அல்லது போன் செய்து பேசு வார் இந்த தொலை உணர்வு தான் இந்த மாதிரி யான விஷயங்களை உங்களுக்கும், மற்றவருக்கும் இடையே நல்லுறவை ஏற்படுத்தவும் அல்லது விரி சல் அடையவும் செய்கின்றது.

இந்த எண்ணங்கள் அங்கு சென்று மூளையில் ஆழத்தில் பதிவாக வேண்டுமென்றால், உணர்வு என்பது மிக முக்கியமாக தேவைப்படுகின்றது மற் றும் அங்கு இருக்கும் நபர் உணர்ச்சிவசப்படும் போது அவருடைய மனதில் நல்ல எண்ணங்களின் தாக்கத்தை அங்கே பதிய வைத்து விட முடியும்.

உதாரணமாக குடும்பத்தை பார்க்காமல் குடித்து விட்டு மனைவியை அடிக்கும் கணவனை நினைத்து அவன் உணர்ச்சி வசப்படும்போது இந்த வாக்கியத்தை பலமுறை அவனை நினைத்து "இன்றிலிருந்து குடும்பத்தை நல்ல முறையில் பார்க்கவேண்டும், சந்தோஷத்துடன் வாழ வேண் டும்" என்று இந்த விதிமுறை அவனிடம் பதிவது போல நினைத்தால் அவர் சில காலங்களில் மாறி விடுவார்.

தொலைபேசியை நாம் எப்படி பேசுகிறோம் இதே போல் தானே. ஒரு விஷயம் இங்கிருந்து அங்கே அனுப்புவதும், அங்கிருந்து இங்கே பெருவதும் எப்

படி நடக்கின்றது அதே போல் தான். நம் மூளை யின் ஏதோ ஒரு பகுதியில் தான் மனம் உள்ளது என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

அது மட்டுமன்றி ஃஎப்எம் ரேடியோவில் கேட்கும் ஒலிகள் அனைத்தும் அலைவரிசையின் மூலமா கத் தான் விஷயங்களை அனுப்பவும் பெறவும் முடி கின்றது.

அதே போல் தான் நம் மனதில் உருவாகும் எண்ண அலைவரிசையின் மூலம் அனைத்து ஆசைக ளையும் நம்மால் அடைய முடிகின்றது.

அந்த ஆற்றல்கள் அனைத்து கண்களுக்கும் புலப் படாதவை. அதாவது கண்களுக்கு தெரியாது இந்த மனமானது செய்திகளை பதியவைக்கும் தளமாக வும், நாம் விரும்புவதற்கு ஏற்ற படைப்புகளை உரு வாக்கி தரும் தளமாக அமைந்துள்ளது.

அதனால் செய்திகளைச் சேகரிக்கும் தளமாக வைக்காமல் படைப்பாற்றல்களை தட்டி எழுப்பும் ஒரு கருவியாக பயன்படுத்தி தேவையை பூர்த்தி செய்துக் கொள்ளுங்கள்.

அதாவது திரைப்படம், கட்டிடக்கலை, உலகில் உருவாக்கிய அனைத்தும் எல்லையில்லாத சக் தியின் மூலம் வெளிப்படுத்தப்பட்ட கற்பனைகள் தான்.

இந்த யோசனைகள் நேரடியாக கடவுளிடமிருந் தும், ஏற்கனவே இவை பற்றி தெரிந்து வைத்திருக் கும் மக்களிடமிருந்தும் பெறப்பட்ட விஷயங்களாக இருக்கின்றது.

# உங்களுக்கு தெரியாத பல வழிகள் பிரபஞ்சத்திற்கு தெரியும்

பிரபஞ்சம் அதனுடைய பல வழிகளில் தேடி இலக்குகளை சுலபமாக பெறுவதற்கான வழிகளை பல இடங்களில் தேடி அதை உங்களிடம் அனுப்பும், நீங்கள் பேசக் கூடிய அனைத்து வார்த்தைகளிலும் பிரமாண்டமான அதிர்வுகள் நிறைந்துள்ளது. அதனால் நாம் எதை பற்றி பேச வேண்டும் என்பதில் கவனம் செலுத்துவது மிக அவசியமான விஷயமாகும்.

நம் எண்ணத்தின் மூலமாகவும், உணர்வுகளின் மூலமாகவும் உடம்பின் மூலமமாகவும் அதிர்வுகள் உருவாகிறது. இது கடலில் உருவாகும் அலைகளை போல உடம்பில் எப்போதும் அலைகள் உருவாகிக் கொண்டே இருக்கின்றன. இவை அனைத்தும் ஐம்புலன்களின் மூலமாக ஏற்படுவதால் அதனை அடக்கும் ஒரே வழி மன அமைதி.

உதாரனமாக ஒரு பெரிய கோவில் மணியை அடிக்கும் போது அந்த மணியிலிருந்து பெரும் அதிர்வு உண்டாக்கி அதன் பிறகு அமைதி ஆகிவிடும், அதே போல் மனம் சஞ்சலமாக இல்லாமல் இருக்கும்போது உங்கள் விருப்பங்களைக் காட்சிப்படுத்த வேண்டும்.

நாம் யோசிக்கும் எண்ணங்கள் அனைத்தும் பலவிதமான அதிர்வுகளையும், ஆற்றல்களையும் வெளிப்படுத்துகின்றது. அதனால் குறிக்கோளுக்கு தகுந்த அதிர்வுகளை உருவாக்குவது அவசியம், அதை உருவாக்க வேண்டுமென்றால் காட்சிப்படுத்த வேண்டும்.

மனக்காட்சிப்படுத்த வேண்டும்:
பெரிய மன காட்சிகளாக இருக்க வேண்டும், தீவிரமான காட்சிகளை பார்க்க வேண்டும், தெளிவான காட்சிகளாக இருக்க வேண்டும். உணர்வுபூர்வமான காட்சிகளை வர்ணித்து அதை ஏற்கனவே உங்களிடம் இருப்பது போலவே பார்க்க வேண்டும்.

நீங்கள் விரும்பும் பொருட்கள் உங்களிடம் வர வைக்க இந்த நோக்கங்களை அடைவதற்கு வேறு வழியே இல்லை என பார்க்க வேண்டும் திரும்பத் திரும்ப ஒரே விதமான எண்ணங்களை பதிய வைக்கவேண்டும்.

# மிக பெரிய குறிக்கோளை நிர்ணயிங்கள் அப்படியே அதை அடையுங்கள்

வெற்றிக்கான முதல் முக்கியமான விஷயம் என்ன என்று பார்த்தீர்களென்றால் மிகப்பெரிய அளவில் சிந்தித்து உங்கள் குறிக்கோள்களை பெரிய அள வில் வைத்துக் கொள்வது தான்.

நீங்கள் இப்போது உள்ள நிலைமையில் இருந்து உங்களை 10 மடங்கு அல்லது 15 மடங்கு பொரு ளாதார அளவில் உயர்த்திக் கொண்டு உங்கள் மனதில் அந்த விஷயங்களை போக அனுமதியுங் கள்.

உங்களால் எவ்வளவு பெரியதாக சிந்திக்க முடியும்? உதாரணமாக பெரும்பணம், செல்வச்செழிப்பு, ஆடம்பரமான கார், வசதியான வீடு, குடும்பத்தை

சந்தோஷமாக பார்த்துக் கொள்ள அருமையான மனைவி, எப்போதும் நல்லுறவை தரக்கூடிய நண் பர்கள், ஆரோக்கியமான உடல், மற்றவர்கள் நம்மை உயர்ந்த மரியாதையுடனும் மதிப்புடனும் பார்த்தல், என்று இவை அனைத்தும் உங்களது வாழ்வில் நடக்க வேண்டும் என வைத்துக் கொள் ளுங்கள்.

"நீங்கள் சின்ன விஷயங்களை யோசித்தாலும் நடக்கும், பெரிய விஷயங்கள் யோசித்தாலும் நடக் கும்".

சின்ன விஷயங்களை குறிக்கோளாக நிர்ணயித்து நடந்திட எவ்வளவு காலம் ஆகுமோ அதே நேரம் தான் பெரிய கனவை அடைவதற்கும் ஆகும் நேரம் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

மனம் என்பது ஒரு நிலத்தை போலவே ஏனென் றால் விலை உயர்ந்த முந்திரி, ஏலக்காய், மிளகு, இலவங்கம் சாகுபடி செய்ய எவ்வளவு உடலுழைப் பும், காலமும் தேவையோ அதே போல தான் விலை குறைந்த அரிசி, பருப்பு, காய்கறிகளை விளைவிக்கவும், அறுவடை செய்யவும் ஆகும்.

அதனால் ஒரு பிரம்மாண்டமான நோக்கத்தை உறுதி செய்து அதற்காக உழைக்க ஆரம்பியுங்கள்.

இவை அனைத்தும் நீங்கள் எப்படி கனவு காண்கி றீர்கள் என்பதை பொறுத்தது. நீங்கள் எந்த நிலை யில் இருந்தாலும் அதாவது ஒரு பைசா கூட இல்லை, அனைத்து விஷயங்களிலும் கஷ்டப்பட்டு கொண்டிருந்தாலும் சரி உங்கள் குறிக்கோளை நிர்ணயிப்பது முக்கியம்.

"ஏனெனில் உங்கள் கனவுகளை நிர்ணயித்தால் நீங்கள் உங்கள் வெற்றியை பாதி அடைந்ததற்கு சமம்".

நிறைய மக்கள் மிக வறுமையான நிலையில் இருந்து பெரும் பணக்காரர்களாக மாறி இருப்பதை நீங்கள் எங்கேயாவது கேட்டு இருக்கலாம் அல்லது பார்த்திருக்கலாம் இதை எப்படி தெரிந்து கொள்வது அதாவது அதை நீங்கள் தெரிந்துக் கொள்ள சிறிது நேரம் அமைதியாகவும், கவனமாகவும் இருந்து உங்களுடைய எல்லா நேரங்களிளும் நீங்கள் அடைய வேண்டும் என்று யோசித்த விஷயங்கள் என்னென்ன என்பதை எழுதிக் கொள்ளுங்கள், செயல்படுங்கள்.

1. எவ்வளவு பணம் சம்பாதிக்க வேண்டும்?

2. எந்த அளவு உங்களுடைய தொழிலை முன்னேற்ற வேண்டும்?

3. எப்பேர்பட்ட வாழ்க்கை வாழ வேண்டுமென்று ஆசைப்படுகிறீர்கள்?

இப்போது நீங்கள் எப்படிப்பட்ட பிரம்மாண்டமான கனவை அடைய வேண்டும் என்ற தெளிவான, துல்லியமான வரைபடம் உள்ளதோ அப்போது நீங்கள் நேர்மறை மனநிலை கொண்டவராக வலம் வர ஆரம்பிப்பீர்கள். உங்களுடைய கூர்மையான பார்வை, தெளிவான குறிக்கோள் மீது இருந்தால் உங்கள் வெற்றியை யாராலும் தடுக்க இயலாது.

## *ஆக்சன் பிளான்:*

உங்களுடைய வாழ்க்கையில் உங்களுக்கு தெரிந்த நீங்கள் தோற்றுப் போக மாட்டீர்கள் என நினைக்கும் உங்கள் குறிக்கோள் எது அதை நீங்கள் கற்பனை செய்ய வேண்டும்

இன்று அதை அடைவதற்கு 1% முயற்சி செய்தால் குறைந்தது 3 மாதத்தில் அதை 50% ஆவது நீங்கள் அடைந்து இருப்பீர்கள்.

# மிகவும் சக்திவாய்ந்த பயிற்சி நிமிடங்களில் மாற்றத்தை ஏற்படுத்தக் கூடியது

- ❖ கண்களை மூடிக்கொண்டு அமைதியான இடத்தில் உங்களுக்கு ஏற்றாற்போல் அமர்ந்து கொள்ளுங்கள்,
- ❖ மூச்சை மூன்று முறை நன்கு இழுத்து வெளியே விடுங்கள்.
- ❖ உச்சந்தலை மற்றும் இதயம் ஓய்வாக இருக்கின்றது என்று கூறிக்கொள்ளுங்கள்.
- ❖ இரு கண்கள் மற்றும் முகம் முழுவதும் ஓய்வாகவும் இனிமையாகவும் இருக்கின்றது.

❖ முதுகு தண்டும், முதுகும் ஓய்வாகவும் இறுக்கங்கள் குறைந்து மிகுந்த நிம்மதியுடன் இருக்கின்றது.

❖ கழுத்து, தோல்பட்டை மிகுந்த ஒளியுடன் அமைந்த சந்தோஷத்துடன் இருக்கிறீர்கள்.

❖ வயிறு, இடுப்பு, மார்பு பகுதி முழுவதும் நிம்மதியுடன் இறக்கங்கள் குறைந்து ஓய்வாக இருக்கின்றன.

❖ நீங்கள் மிகுந்த ஓய்வாக இருக்கிறீர்கள்.

❖ கால் முழுவதும் ஓய்வு உடனும், நிம்மதியுடனும் அற்புதமாக இருக்கின்றது.

❖ இப்போது உங்கள் உடல் உறுப்பில் எங்கேனும் இறுக்கம் இருந்தால் அங்கே கவனத்தை முழுவதுமாக செலுத்தி இறுக்கத்தை வெளியேற்றி விடுங்கள்.

❖ இப்போது உங்கள் தசைகள், நரம்புகள் அனைத்தும் ஓய்வாக, மிகுந்த ஓய்வாக இருக்கின்றது.

❖ உங்கள் மனத்திரையில் இப்பொழுது ஒன்றுமில்லாமல் வெட்ட வெளிச்சமாக இருக்கின்றது.

❖ இப்போது வயல் வெளியில் பச்சை பசேலென இருக்கும் புற்கள், அதை சுற்றி இருக்கும் மரங்கள், வயல் வெளிக்கு நடுவே சிறிய குளம், அதன் அருகே அமர்ந்து இருக்கிறீர்கள் என கற்பனை செய்யுங்கள்.

❖ அங்கே கண்களை மூடி அமைதியாக அமருங்கள்.

❖ இனிமையான ஒரு உணர்வு உங்களுக்குள் நிரம்பி வழிகின்றது என உணருங்கள்.

❖ உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை தசைகள் நரம்புகள், உறுப்புகள் அனைத்தும்

ஆழ்ந்த ஓய்வு பெறுகிறது. நீங்கள் மேலும் ஆழ்ந்த ஓய்வு நிலைக்கு செல்கிறீர்கள்.

- ❖ நீங்கள் இப்போது முழுமையான ஆரோக்கி யமான மனிதராகவும், நிம்மதியான மனிதரா கவும் இருக்கிறீர்கள் இதை நீங்கள் நன்றாக உணருகிறீர்கள் இதுதான் உண்மை என்று நம்பி ஆழ் நிலைக்கு சென்று அற்புத சூழலை உண்டாக்குங்கள்.
- ❖ உங்களுடைய அனைத்து எதிர்ப்புகளும், எதிர்மறை பழக்கங்களும் குறைந்து வருகின் றது
- ❖ அதே இடத்தில் அனைவரின் ஆதரவும், நேர்ம றையான பழக்கங்களும், நல்ல எதிர்காலம் மற் றும் உயர்ந்த வாய்ப்புகளும் உருவாகின்றது.
- ❖ அப்படியே இது நிஜ உலகில் நடப்பதுபோல் நினைத்து கண்களை திறந்துக் கொள்ளுங் கள்.

இதே பயிற்சியை கீழுள்ள விஷயங்களுக்கும் பயன் படுத்தலாம் மற்றும் உங்களுக்கு தகுந்த மாற்றிய மைத்தும் கொள்ளலாம்.

1. உடல் ஆரோக்கிய பயிற்சி
2. நிறைய வாடிக்கையாளர்களை அடைவ தற்கான பயிற்சி
3. உடலில் உள்ள வலி நிமிடத்தில் குணமாக் கும் பயிற்சி
4. அதிர்ஷ்டத்திற்கான பயிற்சி
5. அதிகமான பணம் பெருவதற்கான பயிற்சி
6. நிறைய பணம் சம்பாதிக்கும் வாய்ப்புகளை பெருவதற்கான பயிற்சி
7. வசதியான வீடு மற்றும் கார் வசதி பெருவ தற்கான பயிற்சி

மனத்திரையில் இவை அனைத்தையும் ஏற்கனவே உங்களிடம் உள்ளது போல் இதயத்திலிருந்து பார்த்து கடவுளிடம் ஒரிஜினல் காப்பியையும், நீங்கள் நார்மல் காப்பியையும் வைத்துக்கொண்டு அனுப்புங்கள்.

# உங்களுடைய வருமானத்தை இப்போது அதிகரிக்க செய்யுங்கள்

நான் என் புத்தகத்தில் கூறியிருக்கும் சக்தி வாய்ந்த பயிற்சிகளை பயன்படுத்த வில்லையென் றால் சாதாரணமான மக்களை போலவே நீங்க ளும் தினந்தோறும் எந்த ஒரு முன்னேற்றமும் இன்றி கடினமாக உழைத்து கஷ்டப்பட்டு கொண்டு குறைந்த பணவரவுடன் உங்களை நீங்களே பூட் டிக்கொண்டு வறுமையில் வாழும் அவல நிலையில் ஒவ்வொரு நாளையும் கடந்து போகக்கூடும்.

அதனால் ஒவ்வொரு நாளும் இந்த பயிற் சியை மேற்கொண்டு அற்புதமான வாழ்க்கையுட னும், உயர்ந்த வெற்றிகளுடனும், பிரம்மாண்டமான பணத்துடனும், முன்னேற்றத்துடனும் வாழ இப் போதே முடிவு செய்துகொண்டு இதில் கூறியிருப் பதை செயல்படுத்தத் துவங்குங்கள்.

உதாரணமாக இதனை பயன்படுத்தாதவர்கள் இப்போது மாதம் 20 ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறீர்கள் என்றால் அதை மாற்ற அவர்கள் குறைந்தது ரூபாய் 25 ஆயிரம் முதல் 30 ஆயிரம் வரை அடைய ஆசைப்படுவார்கள்.

இதனை புரிந்து கொண்டு துல்லியமாக பயன்படுத்தும் ஒருவர் என்ன வறுமை நிலையில் இருந்தாலும், இப்போது அவர் பத்தாயிரம் ரூபாய் சம்பளத்தில் இருந்தாலும் இதனை தெரிந்துக் கொண்ட மாத்திரத்திலேயே ஏழ்மையிலிருந்து மாறி எந்தவிதமான குறிக்கோள்களையும் அவர்களால் அடைய முடியும்.

ரூபாய் 10 ஆயிரத்திலிருந்து 10 லட்சம் வரை கூட உடனடியாக நிர்ணயித்து அதற்காக செயல்படலாம். இன்னும் ஒரு வருடத்திற்குள் 10 லட்சத்தை அடைவேன் என நிர்ணயிக்கலாம். இந்த பணம் குறைவாக இருந்தாலும், அதிகமாக இருந்தாலும் உங்களுக்கு தகுந்தாற்போல அதனை மாற்றிக் கொண்டு செயல்படுங்கள்.

## *பயிற்சி 1:*

உங்கள் ஊரில் மிகப்பெரிய காபி ஷாப் இருக்கும் இடத்திற்கோ அல்லது ஏதாவது ஒரு நட்சத்திர ஹோட்டலுக்கோ சென்று இரண்டு அல்லது மூன்று மணி நேரம் வரை நிம்மதியாக அமரும்படி பார்த்துக்கொள்ளுங்கள்.

யாரும் உங்களை தொந்தரவு செய்யதவாறு அமைதியான இடமாக இருக்க வேண்டும்.

பிறகு உங்களுடைய குறிக்கோளான ரூபாய் 10 லட்சத்தை நினைத்துக்கொண்டு அதை எப்படி

யெல்லாம் அடைய முடியும், அதற்கான வழி என் னவென்று யோசித்து ஒரு காகிதத்தில் எழுதிக் கொள்ளுங்கள். பிறகு எத்தனை வழிக் கிடைத்தா லும் அதை எழுதிக் கொள்ளுங்கள்.

இதேபோல் வாரத்திற்கு மூன்று நாட்கள் இதனை யோசித்து செயல்படுத்த நேரத்தை பயன்படுத் துங்கள். ஆனால் முக்கியமான விஷயம் நீங்கள் எங்கு செல்கிறீர்கள், எதற்காக செல்கிறீர்கள் என்று யாருக்கும் தெரியாமல் பார்த்துக் கொள்வது அவ சியம். இந்த குறிக்கோளை அடைந்த பிறகு வேண் டுமென்றால் மற்றவர்களுக்கு கூறலாம்.

அந்த பணத்தை அடைய கண்ணுக்குத் தெரிந்த வழிகளைத் தேடுங்கள், எழுதிக்கொள்ளுங்கள், செயல்படுத்துங்கள்.

பிறகு கண்ணுக்கு புலப்படாத வழிகளை உங்கள் மனதிடம் கேட்க ஆரம்பியுங்கள் ஏனெனில் அது எல்லையற்ற பேரறிவு ஆகும். யோசியுங்கள்! அப் போதே விடை கிடைக்கும் அல்லது சில நேரம் சில நாட்களில் கூட கிடைத்துவிடும்.

இந்த பண குறிக்கோளை தனித்தனியாக பிரித்து எந்தெந்த வழிகளில் அடைய முடியும் என்பதனை பார்த்து செயல்படுங்கள்.

## *பயிற்சி 2:*

கண்களை மூடிக்கொண்டு, உங்களை அமைதிப் படுத்திக் கொண்டு, அப்படியே அமருங்கள்.

உங்களின் இதயத்துடிப்பை கவனியுங்கள். அமை தியாகவும், பொறுமையாகவும் அதன் மீது கவ னத்தை செலுத்துங்கள். அப்போது அந்த இதயத்

துடிப்பும், உங்களுடைய மொத்த உடலும் அதிர்வுகளுடன் அசைவதை உங்களால் உணர முடியும் போது உங்களிடம் கூறிக் கொள்ளுங்கள், “நான் எல்லையற்ற பணத்தின் காந்தம், நான் இப்போது பத்து லட்ச ரூபாயை சம்பாதித்துக் கொண்டிருக்கிறேன்”, தொடர்ந்து உணர்வுபூர்வமாக 10 முதல் 20 முறை உண்மையாகவே அப்படி தான் இருக்கிறது என்பதுபோல் கூறுங்கள். இது ஒரு நாளைக்கு 3 முதல் 4 வரை செய்து வாருங்கள்.

# மனதை எப்படி கையாள்வது மற்றும் சந்தோஷமாக இருப்பது

மனதில் பல்வேறு எண்ணங்களின் மாற்றம் நமக்கு குறைவான எண்ணத்தின் ஆற்றல் மற்றும் அதிக மான எண்ணத்தின் ஆற்றலின் மூலம் சந்தோஷ மான விஷயங்களை பற்றி யோசிக்கிறீர்கள் பார்க் கிறீர்கள் என்றால் அந்த மொத்த உணர்வுகளை யும் குறிக்கோளை அடைந்தது போல நினைக்க வேண்டும்.

உதாரணமாக சந்தோஷமான பாடல் கேட்கும் பொழுது, சந்தோஷமான படம் பார்க்கும் பொழுது, சந்தோஷமான தருணத்தில் இருக்கும்போது நிம் மதியான அமைதியான நேரத்தில் உருவாகும் ஆற் றல்கள் இவை,

- நேர்மறை ஆற்றல்களை அதிகரிக்கும்
- பெரிய சந்தோஷம் அல்லது மிகப்பெரிய சந்தோஷம் மகிழ்ச்சி

- ஆழ்ந்த அமைதி
- எக்கச்செக்க சந்தோஷம் மனதினை மூழ் கடிக்கும் மகிழ்ச்சி
- ஆரோக்கியம்
- மன நிறைவு
- நிம்மதி
- உற்சாகம்
- கட்டுப்பாடு கொண்ட உறக்கம்
- மனப்பூர்வமான நன்றி உணர்வு
- பேரின்பம்

சந்தோஷமான மக்களுடன் இருக்கும் பொழுது நீங்களும் சந்தோஷமாக காணப்படுவீர்கள்.
இந்த மாதிரியான மனநிலைகள் அனைத்தும் உங் களின் வெற்றிகளை அதிவேகமாக பெற செய்து விடும். ஏனென்றால் உங்கள்ன் அதிர்வுகளையும் மாற்றங்களின் சக்திகளையும் பெரிய வகையில் அதிகரிக்கச் செய்யும்.

அதனால் உங்களின் மனதின் காட்சிகளை தெளிவாக இருக்கும்படி பார்த்துக் கொள்வது அவசியமான ஒன்றாகும். உதாரணமாக உங்கள் வீட்டில் கல்யாணம், திருவிழா, கிரகப்பிரவேசம், என பண்டிகை நாட்களில் சொந்தக்காரர்கள் உங் கள் வீட்டுக்கு வரும் போது உங்களுடைய மனம் எப்படி இருந்தாலும் சந்தோஷமாக மாறிவிடும். நீங் கள் தொடர்ந்து சந்தோஷத்தில் அந்த நாட்களில் இருக்கும்போது அந்த சந்தோஷமான நிலை உங் களுடைய மனதில் பதிகின்றது.

பிறகு அவர்கள் சென்று விட்டாலும் அந்த சந் தோஷத்தின் நிகழ்வு உங்களுடைய மனதில் ஓடிக் கொண்டே இருக்கும் ஒரு வாரம் கழித்து கொஞ் சம் கொஞ்சமாக மறைய ஆரம்பிக்கும்.

இது போல நல்ல நிகழ்வுகளை தினமும் மன தில் ஓடவிட்டு எப்போதும் எதிர்மறை சிந்தனைக்கு இடம் கொடுக்காமல் நேர்மறையில் இருந்து கொள்ளுங்கள்.

“உங்களுடைய மனத்தடைகளை மற்றும் கட்டுப் பாடுகளை உடைத்தெறிய வேண்டும்” அப்போது நீங்கள் விரும்பும் விஷயங்களை இன்னும் வேக மாக அடைவீர்கள். பெரும்பாலும் உங்களை தடுப் பது எதிர்மறையான எண்ணங்கள் தான் அது மட்டு மன்றி நீங்கள் மனதில் உருவாக்கி வைத்திருக்கும் பொய்யான வழிமுறைகளும், விதிமுறைகளும் கூட உங்களை எதையும் செய்யவிடாமல் தடுக்கிறது.

எதிர்மறையான படங்களையும், பதிவுகளையும் உங்கள் மனதில் இருந்து அகற்ற வேண்டும். புதிய விஷயங்களை அதற்கேற்றபடி புகுத்த வேண்டும்.

உங்களுடைய மனதில் உங்களைப் பற்றி நல்ல படங்களை உருவாக்கி வைக்கிறீர்கள் என்றால், உதாரணமாக நேர்மறை எண்ணம் கொண்டவரா? அல்லது எதிர்மறை எண்ணம் கொண்டவரா? என யோசிக்க வேண்டும். முக்கியமாக நீங்கள் புத்தி சாலி, திறமைசாலி, அறிவாளி என்ற படங்கள் பதி வாகி உள்ளதா அல்லது வன்கொடுமை செய்ப வன், முட்டாள், வெட்டி பையன் போல இருக்கிறீர் களா என நினைத்து உங்களின் புது படைப்பை மனதில் உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

இனிமேல் உங்களால் எதையும் நினைத்த மாத்தி ரத்தில் சில நாட்களில் அல்லது சில வாரங்களில் அடைய முடியும் எனவும், அதற்கான புதுவித வழி கள் உள்ளது எனவும் உங்கள் மனதில் அடிக்கடி பதிய வைக்க வேண்டும்.

நீங்கள் சிறியவரா, பெரியவரா, கறுப்பா, வெள் ளையா, கீழ் ஜாதியா, மேல் ஜாதியா என்றெல் லாம் பார்க்காமல் அனைவருக்கும் ஒரே விதமான விளைவுகள் தான், இதன் மூலமாக தான் அனை வருடைய ஆசைகள் நிறைவேறுகின்றது. நீங்கள் எந்த மாதிரியான பொருளைக் கேட்டாலும் அத னால் தர முடியும் எந்த பாரபட்சமும் பார்க்காது.

அந்த விதிமுறைகள் உங்கள் ஆசைகளை கேட் டவுடன் செயல்படுத்த ஆரம்பிக்கும், மற்றவர் உங்களுக்கு கீழ்படுகின்றார்களோ இல்லையோ ஆனால் இந்த எல்லையில்லா ஆற்றல் உங்க ளுக்கு கட்டுப்பட்டு உங்கள் மனதில் உள்ள தடை களை உடைத்து எறிந்து உங்கள் ஆசைகளை செயல்படுத்தும் ஒரு பிரமாண்டமான சக்தி அது.

# பிரபஞ்சத்தில் முடியாதது என்று ஒன்றுமே இல்லை

“நானும் பிரபஞ்சமும் ஒன்று. மிகப்பெரும் செல்வச்செழிப்பு என்னுடையது” என உணர்வுபூர்வமாகவும், தெளிவாகவும், துல்லியமாகவும், முழுமையாகவும் தொடர்ந்து நினைக்கும் காட்சிகள் நிச்சயம் உருவாகியே தீரும், வெற்றி அடைந்து விட்டது போல் உங்களுடைய மனதில் காட்சியை உருவாக்குங்கள்.

எந்த அளவுக்கு உங்களால் சந்தோஷமாகவும், நிம்மதியாகவும் இருக்க முடியுமோ அதே அளவுக்கு மிகப் பெரும் பணக்காராகவும், செல்வந்தராகவும் வாழமுடியும், இவையனைத்தும் எண்ணங்களின் மூலம் தான் நடைபெறுகின்றது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள் பல நாடுகளிலும் சரி, இந்தியாவிலும் சரி, ஏன் தமிழ்நாட்டிலும் சரி, நிறைய பேரிடம் கோடிக்கணக்கில் பணம் புரண்டு கொண்டு தான் உள்ளது. ஏனென்றால் அவர்களின் மனநிலையில் அவர் கோடீஸ்வரன், பணக்

காரன் என்ற எண்ணத்துடன் வாழ்வது தான் அவர் களை வேகமாக கோடிஸ்வரராக்குகிறது.

உதாரணமாக

- சினிமா அக்டர் மற்றும் அக்ட்ரஸ்
- அரசியல் ஹீரோக்கள்
- ஆன்லைன் மார்க்கெட்டிங் ஓனர்
- மேட்ரிமோனி
- கார் கம்பெனி
- ரீடைல் ஓனர்ஸ்
- பிஸ்னஸ் மேன்
- வேலையில் உள்ளவர்கள்

மனமும் தோட்டமும் ஒரே மாதிரியான செயல்க ளையும் விளைச்சல்களையும் தரக்கூடியது. அதா வது சென்ற அத்தியாயத்தில்., தோட்டத்தில் எதை விதைத்தாலும் வளரும் அது குறைந்த லாபத்தை கொடுக்கும் திராட்சை, ஆரஞ்சு, ஆப்பிள், அன் னாசி பழம் ஆக இருக்கலாம் அல்லது பொருட்க ளாக இருக்கலாம். இதன் மூலம் குறைந்த பணம் அல்லது நிறைய பணம் அனைத்தும் உங்கள் மன நிலை பொறுத்துதான் அமைகிறது.

உதாரணமாக மாதம் முழுவதும் வேலை செய்து 30 ஆயிரம் ரூபாய் சம்பாதிக்க போகிறீர்களா அல்லது மாதம் சில நாட்கள் வேலை செய்து அதை விட 5 அல்லது 10 மடங்கு சம்பாதிக்க போகிறீர்களா? எல்லாம் நீங்கள் விதைக்கும் விதையைப் பொறுத் தது. குறைந்த லாபம் தரும் ஆரஞ்சு அல்லது அதிக

லாபம் தரும் பிஸ்தாவா, பாதாமா இப்போதே முடிவு செய்து முன்னேற ஆரம்பியுங்கள்.

**PRIMING YOUR MIND FOR NATURAL RELAXING AND DEBT RELIEF:**

*உங்களை அற்புதமான*
*இயற்கை சூழலுக்கு*
*கொண்டு சென்று*
*கடன்களை ஒழித்து,*
*ஆரோக்கியத்தை அதி*
*கப்படுத்தி, அற்புதமான*
*மனிதராக மாற்றும் பயிற்சி*

- அமைதியான பகுதியில் சிறு வெளிச்சத்தில் ஓய்வாக அமர்ந்து கொள்ளுங்கள்.
- கண்களை மூடிக்கொள்ளுங்கள்.
- மூச்சை நிதானமாகவும், ஆழமாகவும் உள்ளிழுத்து வெளிவிடும் பொழுது உங்கள் மனத்திரையில் உள்ள குழப்பமான காட்சிகளை வெளியேற்றுங்கள்.
- இப்போது மனத்திரையில் அமைதியாக ஒன்றுமில்லாமல் கருமை நிறம் கொண்ட காட்சியாக உள்ளது.
- இருதயத்தில் கவனத்தை வையுங்கள், அங்குள்ள இறுக்கங்களை வெளியேற்றுங்கள். இப்பொழுது உங்கள் இதயம் ஓய்வாக இருக்கின்றது.
- உங்கள் இதயத்தில் பிரகாசமான ஒளி தோன்றுகிறது அப்படியே அந்த ஒளியை

கொஞ்சமாக பெரியதாகி மார்பு பகுதி, இடுப்பு, தோள்பட்டை, கைகள், கழுத்து ஆகிய இடங்களில் பரவுகின்றது. அப்ப டியே அதனுடன் சேர்ந்து கழுத்து முதல் இடுப்பு வரை இறுக்கங்கள் மறைந்து ஆழ்ந்த ஓய்வு பெறுகிறது.

- மீண்டும் உங்கள் கழுத்து, தாடை, வாய், மூக்கு, கண்கள், நெற்றி, உச்சந்தலை என அனைத்திலும் பிரகாசமான ஒளி பரவுகி றது. மேலும் மேலும் ஆழமான அமைதி நிலைக்கு செல்கிறீர்கள்.
- உங்கள் உச்சந்தலை முதல் இடுப்பு வரை ஆழ்ந்த ஓய்வும், புத்துணர்வான ஒளியும் பரவி இனிமையாக இருக்கின்றது.
- பிறகு இடுப்பு முதல் தொடைகள், கால் கள், மூட்டு, பாதங்கள், வரை இறக்கங்க ளும் வலிகளும் மறைந்து ஓய்வாக இருக் கின்றது.
- இப்போது உங்கள் தசைகள், நரம்புகள் அனைத்தும் ஆழமான ஓய்வு நிலைக்கு சென்று உற்சாகமான, சந்தோஷமான ஒளி பரவி இருக்கின்றது.
- இப்போது உச்சந்தலை முதல் உள்ளங் கால் வரை மூழ்கடிக்கும் மகிழ்ச்சியுட னும், ஆனந்தத்துடனும், புத்துணர்வுட னும், கொண்ட ஒளியுடனும் பிரகாசமாக இருக்கிறீர்கள் உங்கள் முகத்தை பார்க் கும் பொழுது ஒரு மிகப்பெரும் பாசிட்டிவ் வைப்ரேஷன் தெரிகின்றது.
- இப்போது உங்கள் மனக்கண்ணில் மழை வரப் போகும் கருமேகம் கொண்ட சூழ் நிலையாகவும், மாலை வேலையாகவும் இருப்பது போன்று கற்பனை செய்யுங்கள்.

மீண்டும் 10,000 அடி கொண்ட உயர்ந்த மலைப் பகுதியின் மேல் 10 கிலோ மீட்டர் கொண்ட நீளமான ஒரு அழகிய வனத்தில் நீங்கள் இருப்பது போன்று கற்பனை செய் யுங்கள்.

- பின் உங்களின் உடல் பிரச்சனைகள் அனைத்தும் அந்த மூலிகையின் நறும ணத்தில் உடனே குணமடைவதை உங் களால் பார்க்க முடிகின்றது மற்றும் அந்த நந்தவனத்தில் நிறைய மரங்களும், மூலிகை செடிகளும் நிறைந்து உள்ளதாக அற்புதமாக, ஆனந்தமாக ஒரு உணர்வு கள் உங்களுக்கு ஏற்படுகின்றது.
- அப்படியே அந்த வனத்தை சுற்றி பார்க் கிறீர்கள் அங்கே ஒரு இடத்தில் சிலபேர் கண்களை மூடிக்கொண்டு பயிற்சி செய்து கொண்டிருக்கின்றனர்.
- அங்கே நீங்களும் அமர வேண்டும் என் றால் ஒரு சில விதிமுறைகள் உள் ளது. அது என்னவென்றால் உங்கள் மன தில் நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கும் அல்லது மாட்டிக் கொண்டிருக்கும் பிரச்சி னைகளை இந்த டெக்னிக் மூலம் வெளி யேற்றலாம், அது மிகவும் சக்தி வாய்ந்த பல நூறு வருடங்களாக பல மனிதர்கள் பயன்ப்படுத்தி அனைத்து பிரச்சினைக ளுக்கும் சில நாட்களிலேயே தீர்வு காணும் ஓர் பயிற்சி ஆகும்.
- கடன் பிரச்சனைக்கான போர்வையை யும், குடும்ப பிரச்சனைக்கான போர்வை

யையும், ஓட்டு மொத்த பிரச்சனைக்கான போர்வையையும் நினைத்து ஒவ்வொன்றாக கழற்றி உங்கள் பக்கத்தில் இருக்கும் கிணற்றில் எரிவதாகவும், உங்களின் அனைத்து சுமைகளும் வெளியேறுவதாகவும், பாரம் குறைவதாகவும் நினைத்து உணர வேண்டும். இது தான் விதிமுறை.

- இப்போது அவர்கள் இடத்தில் கண்களை மூடி அவர்களுடன் அமர்கிறீர்கள். ஏதோ ஒரு உன்னதமான பிரம்மாண்டமான புத்துணர்வு உங்களுக்கு தெரிகின்றது அது மட்டுமன்றி உங்களின் வெளித்தோற்றத்தில் பரவசமாக இருக்கின்றது. புதிதாக பிறந்தது போன்று உள்ளது அந்த வனத்தின் மூலிகை வாசம் வந்து கொண்டே உள்ளது.
- உங்களின் உடல் பிரச்சினைகள் அனைத்தும் அந்த மூலிகையின் வாசனையில் உடனே குணமாவதை உங்களால் பார்க்க முடிகின்றது. இப்போது சுதந்திரமாக மாறி விட்டீர்கள். உங்களிடத்தில் எந்த இறுக்கமும், கவலையும், பயங்களும் இல்லை அனைத்தும் மறைந்துவிட்டது. இப்போது கண்களை திறந்துக் கொள்ளுங்கள். இதை குறைந்தது 48 நாட்கள் வரை செய்தால் சிறப்பான பலன் கிடைக்கும்.

# நீங்கள் தான் வாழ்ந்துக் கொண்டிருக் கும் காந்தம்

காந்த சக்தி என்பது ஒரு பொருளை ஈர்க்கும் சக்தி வாய்ந்த ஆற்றல் பெற்றது. இந்த காந்தத் தின் ஈர்க்கும் சக்தியை யாராலும் மாற்றிவிட முடி யாது. அதற்கு இணையான எடை கொண்ட அல் லது அதற்கும் அதிகமான எடைக் கொண்ட பொருளை தன்னிடம் ஈர்க்கும் ஆற்றல் பெற்றது.

காந்த சக்தி எப்படியோ அதே போல் தான் நாமும். நம்முடைய எண்ணங்களையும், அதிர்வுக ளையும் எப்படி வைத்துக் கொள்கிறோமோ அப் படித்தான் நம் பலன்களும் நமக்குக் கிடைக்கின் றது. ஒருவேளை நம் எண்ணங்கள் எதிர்மறையாக இருக்கும் பொழுது எதிர்மறையான விளைவுகள் நம்மை வந்து சேர்கின்றது. அதேபோல் நேர்மறை யான எண்ணங்களை உற்று நோக்கும் பொழுது அவையே நமக்கு வந்து சேரும்.

இவை அனைத்தையும் நம்மால் சுலபமாக மாற்றி விட முடியும் எப்படி எனில் நம்முடைய

இயந்திரத்தின் (உடலின்) மூலம் வாழ்க்கையை நமக்கு ஏற்றாற்போல் அமைக்க முடியும். உண்மையில் நாம் பிரமாண்டமான காந்த சக்தி நிறைந்த மனிதர்கள். அப்படியெனில் எந்த இரும்பையும் ஈர்க்க முடியுமா என்றால் நான் கூறுவது உங்களுக்கு தேவையான பொருட்களை ஈர்த்துவிட முடியும் அவ்வளவு தான்.

> "ஒரு முறை ஓர் எண்ணத்தை நினைக்கும் போது அது ஓர் எண்ணம் தான், அதையே தொடர்ந்து 5 முறை நினைக்கும்போது அதற்கு அதிகமான உணர்ச்சி ஏற்படுகின்றது, அதையே திரும்ப திரும்ப நினைக்கும்போது அதிகமான காந்தச் சக்தி உருவா*கிறது*"

உங்கள் மனதிற்கு வளமான எண்ணங்களை தினமும் வழங்கிக் கொண்டே இருந்தால் நினைத்ததை கூடிய விரைவில் அடைந்துவிட முடியும். உதாரணமாக மேலே வீசப்பட்ட பந்து நிச்சயமாக கீழே வந்தே தீரும், அப்படியே அது மேலே பறந்து சென்று விடுவதில்லை என்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்க வேண்டும்.

எந்த ஒரு காந்தமும் மற்றொரு பொருளை ஈர்த்துக்கொள்ளும் நேரத்தில் அவற்றை வேகமாக ஈர்ப்பது எது என்றால் காந்தத்தின் தன்மையும், அதன் அதிர்வுகளும், ஆற்றல்களும் தான். இந்த காந்தத்தின் தன்மை எப்போதும் வேலை செய்து கொண்டே இருக்கிறது. இதை மீண்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் எவராலும் மாற்றி அமைக்க முடியாது. நம் மூளையில் 80 ஆயிரத்திற்கும் அதிகமான சிந்தனைகள் பாய்ந்து ஓடிக் கொண்டிருக்கிறது. நீங்கள் விரும்புகின்ற விளைவுகளை அடைவதற்கு தேவையான வழிகளைப் பெற்றுத் துல்லியமாக வாழலாம்.

எண்ணங்களின் சக்தி:

நீங்கள் விரும்புகின்ற விஷயங்களை உங்கள் வாழ்க்கையில் அடைய வேண்டும் என நினைக் கிறீர்களா அதை உங்கள் எண்ணங்களின் மூலம் நிகழ்த்தி விட முடியும். கண்களால் பார்க்க முடியாத மாபெரும் சக்தி தான் இந்த எண்ணங்கள்.

பிரம்மாண்டமான ஆற்றல் கொண்ட எண்ணங்க ளின் மூலம் எதை வேண்டுமானாலும் சுலபமாக அடைந்து விட முடியும். ஒரு பொருளின் மீது ஏற் படும் தாக்கம் நாம் நினைக்கும் எண்ணங்களின் மூலம் தான் நடக்கிறது. எண்ணங்களின் மூலம் உங்களின் மனதை கட்டுப்படுத்த முடியும், பயன்ப டுத்தவும் முடியும்.

எனவே வளமான எண்ணங்களை நினைக்க நினைக்க அது உங்கள் ஆழ்மனதில் பதிவாகி அப் படியே நிறைவேற ஆரம்பித்துவிடும். நீங்கள் மேல் மனதின் மூலம் பலமுறை நினைக்கும் எண்ணத்து டன் சேர்த்து அதிர்வுகளும் இருந்தால் அது மேல் மனதில் இருந்து ஆழ்மனதிற்கு சென்று அந்த விளைவை நம் உடம்பு அனுபவிக்க ஆரம்பிக்க செய்கிறது.

நீங்கள் நினைக்கும் விஷயங்களை மேல்மனம், ஆழ்மனம், உடம்பு ஆகியவற்றை சேர்த்து இந்த காந்த சக்தியும் செயல்படுகிறது.

## *உங்களின் ஆற்றலை அதிகரித்து வேண்டியதை வேகமாக பெறுங்கள்:*

உங்களிடமிருந்து வெளிப்படும் லட்சக்கணக்கான எண்ணங்களும், அதிர்வுகளும் தான் இந்த சமுதா யத்தின் படைப்பாற்றல்.

ஆனால் இந்த படைப்பாற்றலை 100% மக்கள் தொகையில் சில சதவீதத்தினரே இதை அதிக மாக பயன்படுத்துகின்றனர். இவை அனைத்தும் படைப்பாற்றலுடன் சேர்ந்து அதிர்வுகளால் உரு வாக்கப்படுகின்றது.

அப்படியென்றால் இப்போதிலிருந்து கற்பனை என்பது நிஜத்தை உருவாக்கும் என்பது உறுதி யாகின்றது. உதாரணமாக கட்டிட வடிவமைப்பில் இருப்போர், விண்வெளி ஆராய்ச்சியில் இருப் போர், அறிவியல் ஆராய்ச்சியில் இருப்போர் என அனைவரும் இந்த படைப்பாற்றலை பயன்படுத்து கின்றனர்.

இங்கே அதிர்வுகளுக்கு தான் அதிக முக்கியத்து வம் அளிக்க வேண்டும் அது தான் உங்களுடைய அனைத்து வாழ்க்கையையும் வசப்படுத்துகின்றது.

உண்மையில் நீங்கள் அற்புதமான வாழ்க்கையை வாழ்வதற்கான சக்தி உங்களுக்குள் உள்ளது என ஆராச்சியாளர்கள் கூறுகின்றனர். அதுமட்டுமன்றி ஏன் நிறைய மக்களால் அற்புதமான வாழ்க்கையை வாழ முடியவில்லை என்றால் எப்போதும் எதிர்ம றையான எண்ணத்திலேயே மூழ்கி கொண்டிருப்ப தால் தான். அதுவே அவர்களின் வாழ்க்கையை ஆட்கொண்டு மன சோர்வும், உடல் சோர்வும் ஏற் பட்டு தோல்வி அடைய வைக்கின்றது.

இதனை நீங்கள் பயிற்சிகளின் மூலம் மாற்றி முழு மையான நேர்மறை எண்ணம் கொண்ட மனிதராக உங்களால் வாழ முடியும். ஒரு காகிதத்தில் உங்கள் வாழ்க்கையில் இதற்கு முன் ஏற்பட்ட சுவாரசிய

மான சந்தோஷமான முப்பதிலிருந்து ஐம்பது விஷயங்களை தெளிவாகவும் விரிவாகவும் வரிசைப்படுத்தி எழுதிக் கொள்ளுங்கள்.

- உதாரணமாக சின்ன வயதில் மற்றவர்கள் உங்களுக்கு கொடுத்த பரிசுகளின் மூலம் ஏற்பட்ட சந்தோஷம்.
- உங்கள் குடும்பத்தில் உள்ளோர் உங்களுக்கு எல்லா விஷயங்களுக்காகவும் ஆதரவு தரும் போது ஏற்பட்ட சந்தோஷம்.
- உங்கள் பிறந்த நாளின் போது மற்றவர்கள் உங்கள் பிறந்த நாளை கொண்டாடும் போது ஏற்பட்ட அபரிமிதமான சந்தோஷம்.
- ஏதோ ஒரு நேரத்தில் உங்களுடைய கருத்துக்களை மற்றவர்கள் ஏற்று நடந்தபோது ஏற்பட்ட சந்தோஷம்.
- நண்பர்களுடன் ஒன்றாக விளையாடும் பொழுது ஏற்பட்ட சந்தோஷம்.
- பள்ளி மற்றும் கல்லூரிகளில் சேரும் பொழுது ஏற்பட்ட சந்தோஷம்.
- நீங்களும் உங்கள் காதலன் அல்லது காதலியோடு மகிழ்ச்சியாக இருந்த தருணம்.
- வேலை கிடைத்த பொழுது அனைவருக்கும் இனிப்பு கொடுத்த சந்தோஷம்.
- கல்யாணம் ஆன பொழுது ஏற்பட்ட சந்தோஷம்.
- குழந்தைகள் பிறந்த பொழுது ஏற்பட்ட சந்தோஷம்.
- தொழில் தொடங்கி மேலும் மேலும் முன்னேற்றம் அடைகின்றபோது ஏற்பட்ட சந்தோஷம்.

- முதல் மாதம் சம்பளத்தை வாங்கும் பொழுது வீட்டில் கொடுக்கின்ற சந்தோ ஷம்.

- குழந்தை பிறந்து அப்பா அம்மா என்று கூப்பிட்ட அற்புதமான சந்தோஷம்.
- உங்களுக்கென்று நேரம் ஒதுக்கி நிம்மதி யாக இருக்கும் போது உருவாகிய சந்தோ ஷம்.

என இவ்வாறு ஐம்பது விஷயங்களை மனமுருகி சந்தோஷத்தில் மூழ்கியபோது ஏற்பட்ட விஷயங் களை எழுதிக் கொள்வது மிகவும் அவசியம். பிறகு நீங்கள் எழுதிய இந்த அனைத்து விஷயங்களை யும் படித்து முழுமையாக சந்தோஷப்பட்டு அப்ப டியே அந்த சந்தோஷத்தில் உங்கள் குறிக்கோளை ஏற்கனவே அடைந்து விட்டது போல் உணர வேண்டும்.

இவ்வாறு நல்லுணர்வுகளோடு நாம் எட்ட நினைக் கும் குறிக்கோள்களையும் விரைந்து அடைய முடி யும். இதை தொடர்ந்து மூன்று மாதங்கள் செய்து பாருங்கள்.

# பணத்தை அடைய உதவும் சக்தி வாய்ந்த பயிற்சி

நீங்கள் அமைதியான இடத்தில் கண்களை மூடி அமர்ந்துக் கொள்ளுங்கள். மிக ஆழ்ந்த ஓய் வாக இருப்பது போல் கற்பனை செய்து இனி மையான நிலைக்கு செல்வதை போல் உணருங் கள். நீங்கள் அமர்ந்திருக்கும் இடத்தை கொஞ் சம் கொஞ்சமாக மறந்து உள்முகமாக ஆழமாக மூச்சை உள்ளிழுத்து வெளிவரும் போது காட்சிப்ப டுத்துங்கள்.

அப்படியே 100 லிருந்து 70 வரை எண் ணும்போது அந்த எண்ணங்கள் குறைந்து வர வர அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருக்கும் மனநிலை அமைதியாகி விடும். இந்த மன நிலையை மனதில் பதிவு செய்துக் கொள்ளுங்கள். நேரம் கிடைக்கும் போதெல்லாம் செய்து, பிறகு சுயபிரகடனம் செய் யுங்கள் அல்லது காட்சிப்படுத்துங்கள்.

## *பயிற்சி செய்யும் முறை:*

கீழுள்ள ஒவ்வொரு வாக்கியமும் மிகவும் சக்தி வாய்ந்தவை. இவை தான் உங்கள் மனநிலையை மாற்றி வாழ்க்கையை செம்மைப்படுத்த ஆரம்பிக்கும். கீழே வரும் வாக்கியங்களை கூறி விட்டு சிறிது நேரம் எடுத்து கண்களை மூடி அப்பபடியே உண்மையில் அந்த விஷயங்கள் உங்களிடம் இருப்பது போல் துல்லியமாக மனதிரையை உருவாக்குங்கள்.

நீங்கள் ஒவ்வொரு முறை காட்சிப்படுத்தும் போதும் அந்த படைப்புத்திறன் மனதை தூண்டி விட்டு அதற்கு தகுந்த விளைவுகளையும், பலன்களையும் தரும். இதை உங்களுக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் இதுதான் உண்மை அதாவது இந்த பயிற்சியில் உள்ள அனைத்தும் உண்மை. நினைத்தபடியே வாழ முடியும் என இந்த பயிற்சியை ஆரம்பியுங்கள்.

இதை மூன்று மணி நேரத்திற்கு ஒருமுறை நீங்கள் விழித்திருக்கும்போது செய்து கொண்டே இருக்கலாம்.

- ”கடவுள் அவரின் எல்லையில்லா ஆற்றலின் மூலம் என் குடும்பத்தில் உள்ளோர் வசிப்பதற்கும், வாழ்வதற்கும் அழகிய வசதியான ஆடம்பரமான வீட்டை எனக்கு வழங்கி இருக்கிறார்” என மூன்று முறை கூறுங்கள். உங்களுக்கு அதிகமாக பிடிக்கின்ற காரையும் வீட்டையும் தீர்மானித்த பிறகு இந்த பயிற்சியை செய்ய வேண்டும்.
- “நான் பிரம்மாண்டமான எல்லையில்லா புதையல் களஞ்சியத்தில் இருக்கும் உலகத்திற்கு வந்து இருக்கிறேன் இங்கு நான்

எதைக் கேட்டாலும் கிடைக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது".

இங்கு எல்லா வகையான செல்வங்களும் இருக்கிறது, இது மிகப்பெரும் உலகமாக காட்சியளிக்கிறது இங்கு நான் கேட்ட வீட்டையும், காரையும் அங்கிருந்த வேலையாட்கள் எனக்கு வழங்குகிறார்கள். இவை அனைத்தையும் ஆழ்ந்த மன நிலையில் மனதில் பதியும்படி இந்த வாக்கியத்தை பலமுறை கூறிக்கொண்டே வந்தால் அவை உங்கள் வாழ்வின் அனுபவமாக மாறும்.

- "இப்போது நான் பெரும் கோடீஸ்வரர். நான் மிகப் பெரும் பணக்காரன், செல்வந்தன் எனக்கு தேவையான பணம், நகை, இடம், உலக சுற்றுலா, அன்பு, பாசம், சந்தோஷம், உற்சாகம், மக்கள் கூட்டம், ரசிகர்கள் கூட்டம் ஆகியவை கிடைத்துள்ளது".
- "நான் இப்போது செல்வந்தராகவும், பணக்காரராகவும் உணருகிறேன் அதே போல் இந்த அளவிடமுடியாத செல்வச் செழிப்பு என் அனுபவத்தில் உருவாக்குகின்றது".
- "எல்லா வழிகளிலும் எனக்கு கட்டுக்கடங்காத பணம் வந்து கொண்டே இருக்கிறது, என்னிடம் கடவுளின் செல்வ வளம் நிறைந்து வழிகின்றது, எனக்கு பண மழை பொழிந்து கொண்டிருக்கின்றது".
- "அளவிடமுடியாத பணம் வந்து சேர்ந்து கொண்டே உள்ளது. என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கை அனைத்

தும் எல்லையில்லாத பணத்தில் உள்ளது".

- "நான் உயர்ந்த பண்புகளையும், மூழ்கடிக்கும் மகிழ்ச்சியுடனும் சந்தோஷத்துடனும் இருந்து வருகிறேன்".

- "பணம் எனக்கு மிகவும் சுலபமாகவும், வேகமாகவும் என்னிடம் பெருகிக் கொண்டே உள்ளது" என அனைத்தும் என் ஆழ்மனதில் ஆழமாகப் பதிந்து கொண்டிருக்கிறது.
- "இது பிரபஞ்சத்தின் மூலம் அப்படியே எனக்கு பரவி உடனடியாக அனுபவத்தில் கிடைக்கின்றது".
- "இந்த லட்சக்கணக்கான பணத்தை வேகமாகவும், சுலபமாகவும் அடைய கடவுள் என்னை வழிநடத்துகின்றார்".
- "நான் பல லட்ச ரூபாயின் காந்தம் அதன் மூலம் பெரும் பணத்தை அடைகிறேன். நான் எப்பொழுதும் உயர் மதிப்புடனும், உயர் மரியாதையுடனும் வாழ்கிறேன். இவை அனைத்தும் எனக்கு சில மாதங்களில் நடக்கிறது அதற்கு கடவுளுக்கு நன்றி, நன்றி, நன்றி.

## *அசத்தலான வாழ்க்கையை வாழ இதை உடனடியாக செய்யுங்கள்:*

உண்மையில் உங்களுக்கு என்னதான் வேண்டும் எப்படித்தான் வாழவேண்டும் என நினைக்கிறீர்கள் சிறிய நோக்கத்திற்கு இங்கு இடமில்லை,

பெரிய நோக்கத்திற்காக தான் இந்த கீழுள்ள கேள் விகள். அதை எழுதி அந்த விடையை இந்த புத் தகத்தில் கூறியிருக்கும் விஷயங்களை வைத்து அடையுங்கள்.

1. எவ்வளவு பணம் இருந்தால் உங்களு டைய வாழ்க்கையை வாழ போதுமானது?
2. எப்படி உங்கள் வாழ்க்கை இருக்க வேண் டும்?
3. எந்த மாதிரியான குணநலன் கொண்ட மனைவி அல்லது கணவன் இருக்க வேண்டும்?
4. உங்களுடைய ஆன்மாவை மெய்சிலிர்க்க வைக்கும் ஆசை என்ன?
5. எப்படி வாழ்ந்தால் அற்புதமான வாழ்க்கை என்பீர்கள்?
6. உங்களுக்கு மூழ்கடிக்கும் சந்தோஷம் வேண்டுமென்றால் எதை செய்வீர்கள்?

நீங்கள் தான் வாழ்ந்துக் கொண்டிருக்கும் காந்தம்:

காந்த சக்தி என்பது ஒரு பொருளை ஈர்க்கும் சக்தி வாய்ந்த ஆற்றல் பெற்றது. இந்த காந்தத் தின் ஈர்க்கும் சக்தியை யாராலும் மாற்றிவிட முடி யாது. அதற்கு இணையான எடை கொண்ட அல் லது அதற்கும் அதிகமான எடைக் கொண்ட பொருளை தன்னிடம் ஈர்க்கும் ஆற்றல் பெற்றது.

காந்த சக்தி எப்படியோ அதே போல் தான் நாமும். நம்முடைய எண்ணங்களையும், அதிர்வுக ளையும் எப்படி வைத்துக் கொள்கிறோமோ அப் படித்தான் நம் பலன்களும் நமக்குக் கிடைக்கின் றது. ஒருவேளை நம் எண்ணங்கள் எதிர்மறையாக இருக்கும் பொழுது எதிர்மறையான விளைவுகள் நம்மை வந்து சேர்கின்றது. அதேபோல் நேர்மறை

யான எண்ணங்களை உற்று நோக்கும் பொழுது அவையே நமக்கு வந்து சேரும்.

இவை அனைத்தையும் நம்மால் சுலபமாக மாற்றி விட முடியும் எப்படி எனில் நம்முடைய

இயந்திரத்தின் (உடலின்) மூலம் வாழ்க்கையை நமக்கு ஏற்றாற்போல் அமைக்க முடியும். உண்மை யில் நாம் பிரமாண்டமான காந்த சக்தி நிறைந்த மனிதர்கள். அப்படியெனில் எந்த இரும்பையும் ஈர்க்க முடியுமா என்றால் நான் கூறுவது உங் களுக்கு தேவையான பொருட்களை ஈர்த்துவிட முடியும் அவ்வளவு தான்.

> "ஒரு முறை ஓர் எண்ணத்தை நினைக்கும் போது அது ஓர் எண்ணம் தான், அதையே தொடர்ந்து 5 முறை நினைக்கும்போது அதற்கு அதிகமான உணர்ச்சி ஏற்படுகின்றது, அதையே திரும்ப திரும்ப நினைக்கும்போது அதிகமான காந்தச் சக்தி உருவா*கிறது*"

உங்கள் மனதிற்கு வளமான எண்ணங்களை தின மும் வழங்கிக் கொண்டே இருந்தால் நினைத்ததை கூடிய விரைவில் அடைந்துவிட முடியும். உதார ணமாக மேலே வீசப்பட்ட பந்து நிச்சயமாக கீழே வந்தே தீரும், அப்படியே அது மேலே பறந்து சென்று விடுவதில்லை என்ற நம்பிக்கை உங்க ளுக்கு இருக்க வேண்டும்.

எந்த ஒரு காந்தமும் மற்றொரு பொருளை ஈர்த் துக்கொள்ளும் நேரத்தில் அவற்றை வேகமாக ஈர்ப்பது எது என்றால் காந்தத்தின் தன்மையும், அதன் அதிர்வுகளும், ஆற்றல்களும் தான். இந்த காந்தத்தின் தன்மை எப்போதும் வேலை செய்து கொண்டே இருக்கிறது. இதை மீண்டும் நினை வில் வைத்துக் கொள்ளுங்கள் எவராலும் மாற்றி

அமைக்க முடியாது. நம் மூளையில் 80 ஆயிரத் திற்கும் அதிகமான சிந்தனைகள் பாய்ந்து ஓடிக் கொண்டிருக்கிறது. நீங்கள் விரும்புகின்ற விளை வுகளை அடைவதற்கு தேவையான வழிகளைப் பெற்றுத் துல்லியமாக வாழலாம்.

## *எண்ணங்களின் சக்தி:*

நீங்கள் விரும்புகின்ற விஷயங்களை உங்கள் வாழ்க்கையில் அடைய வேண்டும் என நினைக் கிறீர்களா அதை உங்கள் எண்ணங்களின் மூலம் நிகழ்த்தி விட முடியும். கண்களால் பார்க்க முடியாத மாபெரும் சக்தி தான் இந்த எண்ணங்கள்.

பிரம்மாண்டமான ஆற்றல் கொண்ட எண்ணங்க ளின் மூலம் எதை வேண்டுமானாலும் சுலபமாக அடைந்து விட முடியும். ஒரு பொருளின் மீது ஏற் படும் தாக்கம் நாம் நினைக்கும் எண்ணங்களின் மூலம் தான் நடக்கிறது. எண்ணங்களின் மூலம் உங்களின் மனதை கட்டுப்படுத்த முடியும், பயன்ப டுத்தவும் முடியும்.

எனவே வளமான எண்ணங்களை நினைக்க நினைக்க அது உங்கள் ஆழ்மனதில் பதிவாகி அப் படியே நிறைவேற ஆரம்பித்துவிடும். நீங்கள் மேல் மனதின் மூலம் பலமுறை நினைக்கும் எண்ணத்து டன் சேர்த்து அதிர்வுகளும் இருந்தால் அது மேல் மனதில் இருந்து ஆழ்மனதிற்கு சென்று அந்த விளைவை நம் உடம்பு அனுபவிக்க ஆரம்பிக்க செய்கிறது.

நீங்கள் நினைக்கும் விஷயங்களை மேல்மனம், ஆழ்மனம், உடம்பு ஆகியவற்றை சேர்த்து இந்த காந்த சக்தியும் செயல்படுகிறது.

# வளமான வாழ்க்கையை வாழ எல்லையற்ற ஆற்றலின் விதி

யார் ஒருவர் இந்த பிரம்மாண்டமான இருத்தலுடன் எப்போதும் இணைந்து வாழ ஆரம்பிக்கின்றனரோ அவர்களின் அனைத்து நோக்கமும் காந்த சக்தியுடன் சேர்ந்து அப்படியே நிஜ உலகில் உருவாகும். உங்களுடைய மனதில் தொடர்ந்து நினைப்பது, பார்ப்பது, உணர்வது தான் உங்களின் வாழ்க்கை.

”உங்கள் எண்ணங்கள், உணர்வுகள், மனப்படங்கள் மற்றும் சொற்களில் நீங்கள் வெளிப்புறமாக கதிர்வீச்சு செய்வது, உங்கள் வாழ்க்கையில் நீங்கள் ஈர்க்கிறீர்கள்” – கேத்ரீன் பாண்டர்.

“உங்கள் வாழ்க்கையில் நீங்கள் எதை உருவாக்கினாலும் முதலில் உங்கள் கற்பனையில் உருவாக்க வேண்டும்” -டைகோ ஃபோட்டியோ.

இந்த இரண்டு வாக்கியங்களும் காரணகாரிய விதி களின்படி தான் நடைபெறுகிறது. இதனை சரியாக உணர்ந்து மனதில் பதித்துக் கொண்டால் உங்களு டைய ஒவ்வொரு எண்ணத்தையும் எப்படி கட்டுப்ப டுத்த வேண்டும் என்பது தெரியவரும்.

நீங்கள் வாழ்க்கையின் எந்த அடிமட்டத்தில் இருந் தாலும் சரி அந்த சூழலை சுலபமாக உங்களால் மாற்றிவிட முடியும். ஏனென்றால் பிரம்மாண்டமான சக்தி கொண்ட பேரறிவு (பிரபஞ்ச ஆற்றல்) நம்மு டன் எப்பொழுதுமே பயணித்துக் கொண்டிருக்கி றது என்பது தான் இதற்குக் காரணம். இதுதான் உலகத்தின் ஒட்டுமொத்த செயல்பாடுகளை வழி நடத்திக் கொண்டு வருகிறது. உதாரணமாக பக லையும், இரவையும் எவராலும் மாற்ற முடியாது. அது பேரறிவின் கட்டுபாட்டில் உள்ளது.

அதே போல் இந்த உண்மையான பிரபஞ்ச விதி களுக்கு ஏற்ப நம்முடைய வாழ்க்கையில் கடவு ளின் வளங்கள் எப்போதும் நமக்கு வழங்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

இப்போது பேராற்றல் தான் நம்மை வழி நடத்து கிறது என்று உணர்ந்து விட்டீர்கள் என்றால் உங் கள் கவலை, பயம், சந்தேகம் ஆகியவை தீரும் பெரும் செல்வம், பேரின்பம், மூழ்கடிக்கும் சந்தோ ஷம், பெயர், புகழ் உங்களை வந்து சேரும்.

நீங்கள் செய்யப் போவதெல்லாம் இந்த பிரம்மாண் டமான சக்தியுடன் உங்களை நீங்கள் இணைத்துக் கொள்வது தான். இந்த பிரம்மாண்டமான புதைய லும், காந்த சக்தியும் எப்போதும் பிரபஞ்சம் முழு வதும் இயங்கிக் கொண்டிருக்கின்றது. இதனை பயன்படுத்த முன்பு சொன்னது போல் உங்களின்

மனதில் தொடர்ச்சியாக இதை நிலை நிறுத்து வதை பொறுத்து தான் இது அமைகின்றது.

இந்த பிரம்மாண்டமான சக்திக்கு மாபெரும் புதை யற்களஞ்சியம் என பெயர் சூட்டலாம். நீங்கள் கேட் கும் எல்லாவற்றையும் தருவது தான் அதன் வடி வமைப்பு, அனைத்தையும் தருவதற்கு தான் இது காத்துக் கொண்டிருக்கின்றது.

மற்றுமொரு முறை கூறுகிறேன் இந்த எல்லையற்ற ஆற்றல் இந்த பிரபஞ்சத்தில் உள்ள ஒரு செல் உயிரினம் முதல் உலகத்தில் உள்ள அத்தனை படைப்புகளுக்கும் மூலாதாரமாக விளங்குகிறது. இவற்றை துல்லியமாக ஆட்சி செய்வதும் இந்த ஆற்றல்தான்.

# உங்கள் ஒட்டு மொத்த வாழ்க்கையை யும் முழுமையாக மாற்றியமைக் கும் 365 சுயக்கட்ட ளைகள்

இந்த சுயக்கட்டளைகளை தினமும் 21 நாட்களுக்கு, ஒரு நாளைக்கு 2 முறை வீதம் செய்ய வேண்டும். அப்படி செய்யும் போது அந்த வாக்கியங் களுக்கு காந்த சக்தி பெருகி அவை நடக்க ஆரம் பிப்பதை உங்களால் உணர முடியும்.

நான் இந்த நொடியில் வாழ்ந்துக் கொண்டிருக்கி றேன்.

நான் முன்னேறுவதற்கு தேவையான படைப்புத்தி றன் எனக்கு கிடைக்கிறது.

நான் எப்போதும் நல்ல எண்ணங்களால் என் மனதை நிரப்பி இருக்கிறேன்.

நான் ஒவ்வொரு நாளும் மன அமைதியுடன் வாழ்ந்துக் கொண்டிருக்கிறேன்.

நான் என் குறிக்கோளை அடைவதற்கு தேவை யான விஷயங்கள் என்னிடம் இருக்கிறேன்.

நான் நினைத்ததை என்னால் அடைய முடியும் என்று நம்புகிறேன்.

நான் முன்னேறுவதற்கு தேவையான பல வாய்ப்பு கள் என்னிடம் குவிகின்றது.

நான் என்னுடைய முரண்பாடுகளையும், பிரச் சனைகளையும் பொறுமையுடன் தீர்வு காண்கி றேன்.

நல்ல நண்பர்களுடனான பழக்கம் எனக்கு அதிக ரிக்கிறது.

புது புது விஷயங்களின் மீது என் கவனம் அதிகரிக் கின்றது.

எப்போதும் பிரபஞ்சம் எனக்கு வழியினை காட்டு கின்றது.

என் எண்ணங்கள் எப்போதும் முன்னேற்றத்தை நோக்கியே இருக்கின்றது.

என்னால் எதை வேண்டுமானாலும் அடைவதற் கான தகுதி இருக்கின்றது.

எனக்கு தேவையான பணம் எப்போதும் கிடைத் துக் கொண்டிருக்கின்றது.

நான் எப்போதும் புத்துணர்ச்சியுடன் இருந்து வருகிறேன்.

என்னுள் இருக்கும் தீய பழக்கங்கள் என்னை விட்டு விலகிக் கரைந்து செல்கிறது.

நான் செய்யும் வேலைகளை முழு ஈடுபாட்டுடன் செய்கிறேன்.

எனக்கு உற்று கவனிக்கும் திறன், பார்க்கும் திறன், கேட்கும் திறன் நன்றாக இருக்கின்றது.

என் மொத்த உடம்பும் ஆரோக்கியத்தில் மிளிர்கின்றது.

நான் ஒவ்வொரு வாரமும் என்னை சுய ஆய்வு செய்து மாற்றிக் கொள்கிறேன்.

நான் செய்யும் வேலையில் எனக்கு பாராட்டுகள் கிடைக்கின்றது.

நான் எப்போதும் அனைவரிடமும் நேர்மறையான விஷயங்களை மட்டும் எடுத்துக் கொள்கிறேன்.

எனக்கு வாழ மிகவும் பிடித்திருக்கின்றது. அதன் மூலம் சந்தோஷமாக இருக்கின்றேன்.

இதனை படிக்கும் போதோ அல்லது கேட்கும் போது அமைதியாகவும், இனிமையாகவும் இருக்கின்றேன்.

நான் சாந்தமாகவும், இனிமையாகவும், அன்பாகவும் மற்றவர்களுடன் பழகிக் கொண்டு இருக்கின்றேன்.

எனக்கு அனைத்தும் நல்லதாகவே நடந்து கொண்டிருக்கின்றது.

நான் அனைவருக்கும் நன்மையையே விலை விக்கின்றேன்.

நான் செய்யும் வேலையை எனக்கு பிடித்திருக்கிறது.

என் வேலை சம்பந்தப்பட்ட அனைத்து விஷயங்களையும் நிறைய கற்றுக் கொள்கிறேன்.

நான் எனக்குள் அமைதியை உணருகின்றேன்.

நான் எனக்குள் செழிப்பை உணருகின்றேன்.

நானும், என் மனமும் சந்தோஷமாக இருக்கின்றோம்.

என்னிடம் இருக்கும் தெளிவில்லாத விஷயங்களை தெளிவாக புரிந்து கொள்கிறேன்.

நான் என்னை அதிகமாக விரும்புகின்றேன்.

நான் அழகானவன், அனைவரையும் வசீகரிக்கின்றேன்.

கடவுளின் குணப்படுத்துதல் என் மேல் பாய்கிறது, என்னை ஆரோக்கியமாக வைத்திருக்கிறது.

நான் இன்று சிறந்த வழிகளை காண்கின்றேன்.

நான் அருமையான, சிறப்பான உணர்வுகளோடு இருக்கிறேன்.

நான் குறிக்கோளே குறியாக இருக்கிறேன்.

இயற்கையின் சந்தோஷம், பேரன்பு, ஆரோக்கியம், அழகு, நிதானம், அமைதி என் உடம்பு முழுவதும் நிரம்பி வழிகின்றது.

இதன்மூலம் இனிமையாக உணருகின்றேன் அருமை, அருமை, அருமை!

பணம் சம்பாதிக்கும் அறிவினை பெற்றுக் கொண்டிருக்கிறேன்.அதன்மூலம் நிறைய பணத்தை சம்பாதிக்கிறேன்.

எனக்கும் பணத்திற்கும் உள்ள முரண்பாடுகள் அப்படியே கரைகின்றது.

விடியற்காலையில் எழுவது எனக்கு மிகவும் பிடித் திருக்கின்றது.

விடியற்காலையில் எழுந்து சூரிய நமஸ்காரம் செய் வது எனக்கு பிடிக்கின்றது.

அருமையான உடல் சுத்தம் அடைகிறேன்.

ஆரோக்கியமான, சுத்தமான, சத்தான உணவு களை மட்டுமே உட்கொள்கின்றனர்.

இன்றிலிருந்து தூய்மையான ஆன்ம நிலை பெறுகி றேன்.

ஒட்டுமொத்த உலகமும் என்னுடையதாக உணர் தல் ஏற்படுகிறது.

என் வாழ்க்கையை நான் முழுமையாக வாழ்கி றேன்.

நான் இப்போது மனநிறைவாக இருந்துக் கொண் டிருக்கின்றேன்.

நான் நன்றாக சேமித்துக் கொண்டிருக்கின்றேன்.

என் நல்ல விருப்பங்கள் அனைத்தும் நிறைவேற் றப்படுகிறது.

எனக்கு எப்போதுமே செயலில் குதிப்பது தான் மிக வும் பிடிக்கும்.

பணம் பல வழிகளில் இருந்து எனக்கு கிடைக்கி றது.

நான் எப்போதுமே இந்தத் தருணத்தில் வாழ்ந்துக் கொண்டிருக்கின்றேன்.

நான் எந்த பிரச்சினையில் இருந்தாலும் அதை சில நாட்கள் தள்ளிப்போட்டு தீர்வு காண்கிறேன்.

ஏனென்றால் அவசரமாக தீர்வு காண்பது சரியான விளைவை தராது என்பது எனக்கு தெரியும்.

நான் அனைவருடனும் இணக்கத்தோடு இருக்கிறேன்.

நான் எப்போதும் பிரபஞ்சத்தோடு இணக்கமாக ஒன்றாரகலந்து இருக்கின்றேன்.

நான் கடவுள் கொடுத்த இந்த மாபெரும் இயற்கையை ரசிக்கின்றேன்.

பணம் எப்போதும் எனக்கு வேண்டிய நேரங்களில் கிடைக்கின்றது.

நான் செல்லும் இடங்களில் எல்லாம் எனக்கு தேவையான விஷயங்களை எடுத்துக் கொள்கின்றேன்.

நான் என் குறிக்கோளை பற்றி யோசிக்கின்றேன், செயல்படுகிறேன், வெற்றி பெறுகிறேன்.

நான் விடாமுயற்சியோடும், தன்னம்பிக்கையோடும், தைரியத்தோடும், குறிக்கோளாடும் இருக்கின்றேன்.

என்னை பார்த்தாலே ஓர் ஒளிவட்டம் மற்றவர்களுக்கு பரவுகின்றது.

ஒவ்வொரு நாளும் நான் பல வழிகளில் முன்னேறிக் கொண்டிருக்கின்றேன்.

எனக்கு வாய்ப்புகள் நிரம்பி வழிகின்றது.

நான் ஒவ்வொரு நாளும் பல வழிகளில் பணத்தை ஈர்த்துக் கொண்டிருக்கின்றேன்.

எனக்கு வாய்ப்புகள் நிரம்பியிருக்கின்றன.

நான் வெற்றி வாகை சூட ஆரம்பித்துவிட்டேன்.

நான் அனைவரும் நன்றாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்.

இப்போது குறிக்கோளில் இருந்து என்னை தடுக்கும் எண்ணங்களிலிருந்து நான் விடுபடுகிறேன்.

என் மனம் கொஞ்சம் கொஞ்சமாக நேர்மறையாக மாறிக் கொண்டிருக்கின்றது.

நான் காலம் தாழ்த்துதலிலிருந்து விடுபட்டு உடனடியாக செயலில் இறங்குகின்றேன்.

நான் தினமும் நன்றாக வாய் திறந்து சந்தோஷமாக சிரிக்கின்றேன்.

என் மனதை நான் நன்றாக கையாளுகின்றேன்.

நான் ஒவ்வொரு நாளையும் சிறப்பாக அனுபவிக்கின்றேன்.

சில சமயங்களில் இயற்கையை ரசிக்கின்றேன், அதோடு ஒன்றியிருக்க விரும்புகின்றேன்.

வாழ்க்கைப் பற்றிய புரிதலை நான் உணர்ந்து கொண்டிருக்கின்றேன்.

தவறுதலாக செய்யும் விஷயங்களில் என்னை மன்னித்துக் கொள்கிறேன்.

நான் மனசாட்சியோடு நேர்மையாக மனிதநேயத்துடன் வாழ்ந்துக் கொண்டிருக்கின்றேன்.

ஒவ்வொரு நாளும் இனிமையான பெருமகிழ்ச்சியுடன் இருக்கின்றேன்.

நான் மற்றவர்களின் உணர்வுகளை புரிந்துக் கொள்கின்றேன்.

நான் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்து வருகிறேன்.

நான் யோகா, தியானம் போன்ற பல விஷயங்களில் ஈடுபடுகின்றேன்.

என்னோடு இருப்பவர்களை சந்தோஷமாக வைத்துக் கொள்கின்றேன்.

நான் என்னையும், மற்றவர்களையும் மதிக்கிறேன்.

நான் எதை செய்ய இந்த உலகிற்கு வந்தேனோ அதை செய்ய ஆரம்பித்து இருக்கிறேன்.

நான் எனக்கு கிடைத்திருக்கும் அனைத்து விஷயங்களுக்கும் அதிக நன்றி உணர்வோடு இருக்கிறேன்.

நான் இந்த அனைத்து சுய கட்டளைகளை நம்புகிறேன், அது எனக்கு நடக்கின்றது.

நான் வெற்றி பெறுவேன் என்ற முழுமையான நம்பிக்கை எனக்கு இருக்கின்றது.

என்னை இப்போது சிறப்பாக வைத்துக் கொண்டிருக்கும் கடவுளுக்கு நன்றி நன்றி நன்றி.

பணம், செல்வ செழிப்பு ஆகியவை என்னிடம் நிரம்பி வழிகின்றது.

எனக்கு உண்ண உணவு, உடுத்த உடை, இருக்க இருப்பிடம் எப்போதும் வற்றாமல் இருக்கின்றது.

என் படைப்புகளை மதிக்கிறேன் அதன் மூலம் பாராட்டப்படுகிறேன்.

என் உடல், மனம், ஆத்மா ஆகியவை சீராக இருக்கின்றது.

நான் நிர்ணயித்த குறிக்கோளை ஏற்கனவே அடைந்தவர்களிடம் எனக்கு நட்புறவு ஏற்படுகிறது.

இவற்றைப் படிக்கும் ஒவ்வொரு முறையும் சிறப்பாக உணர்ந்து கொண்டிருக்கிறேன்.

எனக்கு ஞாபகச் சக்தி நன்றாக இருக்கின்றது.

நான் சாதிக்க வேண்டும் என்று நினைத்த விஷயங்கள் இப்போது என் நிஜத்தில் நடந்து கொண்டிருக்கின்றது.

நான் எதிலும் தனி திறமையுடன் இருக்கிறேன்.

நான் சாதிக்க பிறந்தவன்.

எனக்கு எதையும் தாங்கும் இதயச் சக்தி இருக்கின்றது.

என்னை மீறி எந்த எதிர்மறை எண்ணமும் என்னுள் போய் நுழைவதில்லை.

நான் இப்போது பெரிய பெரிய குறிக்கோள்களை நிர்ணயிக்கிறேன் அதை அடைகிறேன்.

நான் தமிழ் மற்றும் ஆங்கில மொழிகளில் நன்றாக பேசுகின்றேன்.

நான் நிர்ணயிக்கும் குறிக்கோள்களை ஆழ்மனம் அடைய வைக்கின்றது.

நிறைய இடங்களில் என்னை நான் வெளிப்படுத்தி கொள்கிறேன்.

நான் சின்ன சின்ன விஷயங்களை ஈடுபாட்டுடன் செய்கிறேன்.

எனக்கு ஏற்ற சிறப்பான வாழ்க்கை துணைக் கிடைக்கின்றது.

எனக்கு என்றும் அளவில்லாத பல செல்வ வளங்கள் என்னிடம் நிரம்பி வழிகின்றது.

நான் பாதியிலேயே விட்டு விட்ட பல விஷயங்களை முழுமையாக முடித்து விடுகிறேன்.

எனக்கு அழகிய வீடு, அழகிய கார் தானாகவே அமைகின்றது.

பதினாறு செல்வங்களும் என்னிடம் நிறைந்துள்ளது.

என் அபார தொழில் வெற்றிக்கு தேவையான மனிதர்களை நான் இருக்கின்றேன்.

என் திறமைக்கு சமமான வேலை எனக்கு எப்போதும் கிடைத்து வந்துள்ளது.

நான் ஏழை மக்களுக்கு மனமுவந்து தானம் செய்கிறேன்.

நான் என்னுடைய திறமையினை வளர்த்துக் கொண்டிருக்கின்றேன்.

என்னுடைய திறமை என்ன என்பது எனக்குத் தெரியும்.

நேரம் கிடைக்கும் போதெல்லாம் என் மனதை ஆல்பா நிலையில் அதாவது ஓய்வான நிலையில் வைத்துக் கொள்கிறேன்.

நான் அனைத்து நல்ல விஷயங்களையும் திறந்த மனதுடன் ஏற்றுக் கொள்கிறேன்.

எனக்கு கிடைக்க வேண்டிய பணம் அனைத்தும் என்னிடம் வந்து சேருகிறது.

நான் இந்த சிறப்பான நாளை வரவேற்கிறேன்.

நான் இன்று நிறைய விஷயங்களை செய்து திருப்தி அடைகிறேன்.

நான் ஒவ்வொரு நாளும் நன்றாக உறங்குகின்றேன்.

என்னை தடுத்து பேசுவதை கண்டுக்கொள்வதில்லை.

என் தேவைகள் அனைத்தும் பூர்த்தியாகிக் கொண்டிருக்கின்றது.

எனக்கு சிறப்பான தலைமைப்பண்பு இருக்கின் றது.

நானும், பிரபஞ்சமும் ஒன்றரக் கலந்து இருக்கின் றோம்.

நான் ஒவ்வொரு நாளையும் நன்றாக கொண்டா டிக் கொண்டிருக்கின்றது.

எனக்கு கிடைக்கும் அனைத்து வாய்ப்புகளையும் நான் பயன்படுத்துகிறேன்.

நான் என் பல பயங்களை சுலபமாக எதிர்கொள்கி றேன்.

நான் என்னை சிறப்பாக மாற்றிக்கொள்ளும் யுக் தியை தெரிந்து வைத்து இருக்கின்றேன்.

நான் தான் என் வாழ்க்கையை உருவாக்கிக் கொண்டிருக்கிறேன்.

நான் ஒவ்வொரு நாளும் அற்புதமான சுவாரஸ் யமான புதிய புதிய பாதைகளைக் கண்டுபிடிக்கி றேன்.

நான் என் உள்ளுணர்வை நம்புகிறேன் அதன்படி நடக்கிறேன்.

நான் விரும்பும் வாழ்க்கையை உருவாக்க எனக்கு எல்லா அதிகாரமும் இருக்கின்றது.

என்னை நம்பும், நான் வெற்றி பெறுவதைக் காண விரும்பும், ஆதரவான நேர்மறையான நபர்களால் நான் எப்பொழுதும் சூழப்பட்டு இருக்கின்றேன்.

நான் அடையும் ஒவ்வொரு குறிக்கோளையும் நன்றியுடனும், மகிழ்ச்சியுடனும் கொண்டாடுகின் றேன்.

நான் எடுக்கும் சவால்களில் அமைதியாகவு,ம் நம்பிக்கையாகவும் சக்தி வாய்ந்த ஒன்றாகவும் இருந்து செயல்படுகிறேன்.

என் வெற்றிக்கு தடையாக நிற்கும் பழைய எதிர்ம றையான நம்பிக்கைகளை விட்டு விடுகிறேன்.

எனக்கு எல்லாவற்றிலும் சிறப்பான வாய்ப்புகளே அமைகின்றது.

நான் எதை செய்தாலும் தன்னம்பிக்கை, தைரியம், படைப்புத்திறன், விடாமுயற்சியோடு செய்து முடிக் கிறேன்.

நான் பெரிய அறிவாளி, திறமைசாலி என்ற எண் ணத்திலேயே முடிவுகளை எடுக்கின்றேன்.

நான் நானாக இருப்பதால் சந்தோஷமாகவும், சுதந் திரமாகவும், உற்சாகமாகவும் இருக்கிறேன்.

நான் என்னை தொடர்ந்து கற்றுக் கொள்வதி லும், அதை வளர்த்துக் கொள்வதிலும், அதை பயன்படுத்தி சுதந்திரத்தையும் சந்தோஷத்தையும் கொண்டு வருவதிலும் இருக்கிறேன்.

நான் எப்போதும் மகிழ்ச்சியாகவும், நம்பிக்கையாக வும், சுதந்திரமாக இருப்பது என்னுடைய இயல்பு.

என்னை முன்னேற்றக் கூடிய, உந்தித் தள்ளக் கூடிய மனிதர்கள் என்னோடு சூழ்ந்து இருக்கின் றன.

நான் பெறும் எல்லா பணத்தையும் நன்றியுடனும், அன்புடனும் ஏற்றுக்கொள்கிறேன்.

பிரபஞ்சம் எல்லையில்லாதது அதிலிருந்து தாரா ளமான பணம் என்னிடம் பாய்கின்றது.

எல்லாவகையிலும் செல்வந்தனாக இருக்க நான் தகுதியானவனாக இருப்பதால் பணத்தை என்னிடம் சுதந்திரமாக ஓட அனுப அனுமதிக்கிறேன்.

எல்லையில்லாத பணம் எனக்கு தாராளமாக கிடைக்கின்றது,

நான் எல்லா விதத்திலும் செல்வந்தனாக இருக்கிறேன்.

உடல், மனம், உணர்ச்சி, ஆன்மீகம் போன்றவற்றில் நான் சிறப்பாக செயல்படுகிறேன்.

நான் செயல்புரியும் எல்லா வேலையிலும் கடவுளின் ஆசீர்வாதம் நிறைந்துள்ளது.

எனக்கு சொந்தக்காரர்களின் உறவு நன்றாக இருக்கின்றது.

நான் இடம், பொருள், ஏவல் அறிந்து பேசுகின்றேன்.

என் குடும்பத்தை நன்றாக பார்த்துக் கொள்கின்றேன்.

பெரிய பெரிய சாதனைகளை செய்ய நான் எப்போதும் தயாராக இருக்கிறேன்.

என் வாழ்க்கையில் நான் வெற்றி பெறுவதை என்னால் கண்கூடாக பார்க்க முடிகின்றது.

பல சான்றோர்கள் மற்றும் பெரியோர்களுடைய தத்துவங்களை என் வாழ்க்கையில் பயன்படுத்துகிறேன்.

நான் ரிஸ்க் எடுத்து வலிமை பெறுகிறேன் ரிஸ்க் எடுப்பது எனக்கு பிடிக்கிறது.

என் குறைபாடுகள் அனைத்தையும் நிறைகளாக மாற்றுகின்றேன்.

பலவீனங்கள் அனைத்தையும் பலமாக மாற்றுகின்றேன்.

மற்றவர்களை முன்னேற்றுவது எனக்கு பிடித்திருக்கிறது.

நான் என்னை திறமையானவனாகவும், வலிமையானவனாகவும் மாற்றியிருக்கிறேன்.

நானும் வெற்றி அடைவேன், என்னோடு போட்டியிடுவோரும் வெற்றி அடைவார்கள் என்ற நோக்கோடு இருக்கிறேன்.

நான் அனைவரையும் சிரிக்க வைக்கின்றேன் அதே சமயத்தில் அவர்களை முன்னேற்றமும் செய்கிறேன்.

என்னை சுற்றி உள்ள அனைவரின் ஆசிர்வாதமும், வாழ்த்தும், அன்பும் எனக்கு நிறைந்துள்ளது.

எனக்கு எந்த விஷயம் நன்மையையும், சந்தோஷத்தையும் வழங்குகிறதோ அதையே நான் திரும்பத் திரும்ப செய்கிறேன்.

இந்த ஒட்டுமொத்த உலகமும் எனக்காக படைக்கப்பட்டதாக உணர்கின்றேன்.

நான் என் நேரத்தை சிறப்பாக பயன்படுத்தி உற்பத்தியை பெறுகின்றேன்.

மற்றவர்களுடைய சிறப்பான விஷயங்களை கவனித்து அதை பாராட்டுகின்றேன்.

நான் எல்லா இடங்களிலும் பணம் சம்பாதிக்கும் வாய்ப்பை பார்க்கின்றேன்.

பணம் ஒரு குறியீடு. அது எனக்கு தாராளமாக கிடைத்துக் கொண்டிருக்கின்றது.

எனக்கு அருமையான தலைமைப் பண்பு இருக்கின்றது

என்னால் சிறந்தவர்களை தேர்ந்தெடுக்க முடியும்.

நான் என்னால் முடியாதவற்றையும் பயிற்சி எடுத்து செய்துக் காட்டுகின்றேன்.

நான் அனைவரோடும் ஒருங்கிணைந்து வெற்றி பெறுகிறேன்.

என்னால் சிறப்பான திட்டத்தின் மூலம் உயர்ந்த வெற்றிகளைக் குவிக்க முடிகிறது.

நான் என்னுள் இருக்கும் திறமையை கண்டுக் கொள்கின்றேன்.

எனக்கு நன்றாக தெரியும் நான் முன்னேறுவேன் என்று!!

என்னிடம் இருக்கும் அனைத்து விஷயத்திற்கும் நான் நன்றி கூறுகிறேன்.

செல்வ வளங்களின் பாதை எனக்கு திறக்கின்றது.

என் வாழ்க்கையை ஒவ்வொரு தருணத்திலும் அணு அணுவாக ரசித்து அனுபவிக்கின்றேன்.

என் இருத்தலை நன்றாக உணர முடிகின்றது.

நான் பல செயல்களை செய்யும் போது முழுமை யான கவனிப்புடன் செய்கிறேன்.

நான் மற்றவர்களின் மேல் அதிகமான அன்பு செலுத்தினாலும் அளவோடு இருக்கிறேன்.

என்னை எனக்கு அதிகமாக பிடித்திருக்கின்றது.

நான் என் அகத்தையும், புறத்தையும் ரசிக்கிறேன்.

நான் எப்போதும் நேர்மையுடன் இருக்கின்றேன்.

நான் நிறைய வெற்றியை பெறுவதற்கு என் ஆழ்ம னதினை இன்னும் சிறப்பாக பயன்படுத்துகிறேன்.

என் எண்ணம், சொல், செயல் அனைத்தும் ஒரே சீராக இருக்கின்றது.

நான் வெற்றி பெறுவதிலேயே எப்போதும் மனதை வைக்கின்றேன்.

நான் தோல்வி அடைந்தாலும் அதை கற்றுக் கொண்டு மீண்டும் முயற்சி செய்து வெற்றி பெறு கிறேன் அதனால் நான் தோற்பதற்கு சாத்தியமே இல்லை.

நான் எனக்கு தாராளமாக கொடுப்பதன் மூலம் மற் றவருக்கும் தாராளமாக தருகிறேன்.

இந்த உலகில் அதிகமாக செல்வசெழிப்பு இருக்கி றது என்பதை நான் நன்றாக அறிவேன்.

நான் செழிப்பையும், பணத்தையும் அடையும் வரை ஓய்வு எடுக்கமாட்டேன் இது தான் என் முடிவு.

என்னை சுற்றியுள்ளவர்கள் அடையும் வெற்றியை நான் வரவேற்கிறேன் அவர்களை பாராட்டுகின் றேன்.

நான் முன்னேறுவதற்கு தேவையான வாய்ப்பை என்னிடம் வசிக்கின்றேன்.

எனக்கு ஞாபக சக்தி சிறப்பாக இருக்கின்றது.

நான் எந்த காரியத்திலும் அவசரப்படாமல் கவ னித்து யோசித்து பொறுமையாகவும் சிறப்பாகவும் செய்து முடிக்கின்றேன்.

நான் விழிப்புணர்வோடு இந்த தருணத்தில் வாழ் கின்றேன்.

என்னை முன்னேற்றக் கூடிய எண்ணங்களையே எனக்குள் சேர்த்துக் கொள்கிறேன்.

நான் மிகுந்த உற்சாகத்தில் இருக்கின்றேன் நான் இந்த வாழ்க்கையை கொண்டாடிக் கொண்டு இருக்கின்றேன்.

நான் முதல் படத்திலேயே என்னைத் திருத்திக் கொள்கின்றேன்.

இப்போது என் மனம் நான் சொல்வதையெல்லாம் கேட்கின்றது.

இப்போது நான் என் மனதினை ஆளும் குருவாக இருக்கின்றேன்.

நான் என் துணைவருடன் காதல் நயத்துடனும், மிகுந்த அன்போடும் இருக்கின்றேன்.

என்னால் முடிந்த அளவுக்கு எல்லையில்லாத அன்பை என் துணைவருக்கு கொடுக்கின்றேன்.

என் காதல் துணைவரை நன்றாகவும், பத்திரமாக வும் பார்த்துக் கொள்கின்றேன்.

என் துணைவருக்கு எது பிடிக்குமோ அதை பார்த்து பார்த்து செய்துக் கொண்டிருக்கின்றேன்.

அவர்களுடைய குறிக்கோளுக்காக பல உதவி களை செய்துக் கொண்டிருக்கின்றேன்.

வாழ்க்கை என்பது பெறுவது மட்டுமல்ல அள வில்லாமல் கொடுப்பதும் என்று இப்போதிலிருந்து எனக்கு புரிகின்றது.

வளமான, பசுமையான மனதினை இப்போது நான் வைத்திருக்கின்றேன்.

உலகத்தின் எதார்த்தம் தெரிந்து வாழ்ந்துக் கொண்டிருக்கின்றேன்.

நான் என் நண்பர்களோடு சுவாரசியமாக பேசுகின் றேன் அதை அவர்கள் விரும்புகின்றனர்.

தினமும் என்னை உத்வேகமூட்டும் விஷயங்க ளால் ஈர்க்கப்படுகிறேன்.

நான் நினைத்த அனைத்தையும் அடைந்தது போல் ஓர் உணர்வு என்னை தழுவுகிறது அதுவே என்னை அடையும் செய்கின்றது.

எனக்கு என்னுடைய அனைத்து விஷயங்களுமே சாதாரணமாக என் முயற்சியால் நடைபெறுகின் றது.

நான் சிறப்பான சேவையின் மூலம் பெரிய பெரிய லாபங்களை அடைகின்றேன்.

எனக்கு கிடைக்கும் வேலையை அதிவேகமாக முடித்துவிடுகிறேன்.

எனக்குள் இருக்கும் சிறப்பான பழக்கங்களை வெளியிடுகின்றேன்.

நான் இன்று எல்லையில்லாத சந்தோஷத்தில் இருந்துக் கொண்டிருக்கின்றேன்.

யார் என்னை என்ன விமர்சனம் செய்தாலும் அதை கண்டுகொள்ளாமல் முன்னேறுவதிலேயே இருக்கிறேன்.

நான் மாயாஜால உலகில் இருப்பது போல் உணரு கின்றேன்.

ஆழ்மனதை பயன்படுத்தி என்னுடைய சிறப்பான படைப்பை மக்களுக்கு அளிக்கின்றேன்.

மனித குலத்திற்கு சிறப்பான சேவையை செய்யவே இருக்கின்றேன் என்பதை உணர்கின்றேன்.

நான் மேலும் மேலும் சந்தோஷமாக இந்த உலகில் வாழ ஆசைப்படுகிறேன்.

நான் எப்போதும் தீர்வுகளை மாற்றி யோசிப்பதன் மூலம் அதை அடைகிறேன்.

என்னுடைய பேச்சில் தெளிவு, சரியான கருத்து என சிறப்பாக இருக்கின்றது.

நான் என் மனதில் வண்ணமயமான தோட்டத்தை உருவாக்கி அதை அதில் மூழ்கி அனுபவிக்கின் றேன்.

நான் எந்த விஷயத்தையும் கடினமாக எடுத்துக் கொள்ளாமல் சுலபமாக எடுத்து செய்கின்றேன்.

என்னுடைய முழுமையான வாழ்க்கையை நானே உருவாக்குகிறேன் அப்படியே ரசிக்கின்றேன்.

நான் நினைத்த வேலையை உடனடியாக முடிக் கின்றேன், அதிகபடியான பாராட்டை பெறுகின் றேன்.

எனக்கு இருப்பதிலேயே மிக மிக அற்புதமான அரு மையான விஷயங்கள் கிடைக்கின்றது.

என் முயற்சியின் மேல் அதிகமான நம்பிக்கை வைத்திருக்கின்றேன்.

நான் வாழ்க்கையை பற்றி, முன்னேற்றத்தை பற்றி நிறைய தெரிந்து கொள்கிறேன். ஆனால் மற்றவரி டம் ஏதும் தெரியாதது போல் இருக்கின்றேன்.

நான் முழுமையாக புதுமையாக வாழ ஆரம்பித்து விட்டேன். ஏனென்றால் கடந்த கால கசப்புகளை மறந்து விட்டேன்.

நான் எதை நினைத்துக் கொண்டே இருக்கின் றேனோ, அதுவாகவே மாற ஆரம்பிக்கிறேன்.

நான் உருவாக்கும் ஒவ்வொரு படைப்பும் மனித குலத்திற்கு சேவை புரிவதற்காக இருக்கின்றது.

நல்லெண்ணங்களையே என்னுள் உற்பத்தியா கின்றது.

என் இலக்குகளை அடைவதற்கான வீரியம் அதி கமாகின்றது.

நான் அற்புதங்களையும், அதிசயங்களையும் வர வேற்கின்றேன்.

பிரபஞ்சம் தான் வீடு அதில் அனைவரும் ஒன்றே!!

நான் பாதுகாப்பாகவும், தெய்வீகமாகவும் வழிநடத் தப் படுகின்றேன்.

நான் எங்கு சென்றாலும் எனக்கு பணம் கிடைக் கின்றது.

நான் என்னை மன்னிப்பதால் மற்றவர்களையும் மன்னிக்கிறேன்.

என்னுடைய சந்தோஷமான எண்ணங்களே என் ஆரோக்கியமான வாழ்க்கை.

நான் எல்லா வழிகளிலும் ஆதரிக்கின்றேன்.

என் ஒவ்வொரு நாள் தொடக்கமும், முடிவும் நன்றி யோடு இருக்கின்றது.

நான் என்னுடைய மனதினை இனிமையான, அரு மையான எண்ணங்களால் நிரப்பி இருக்கிறேன்.

என் மனதில் இருக்கும் கடந்த கால வலிகள் அனைத்தும் என்னை விட்டு விலகியிருகின்றது.

என் மனம் தானாகவே எதிர்மறையை யோசிப் பதை விட்டு விட்டு நேர்மறையில் மூழ்கியிருன்றது.

நான் புதிய புதிய சிறப்பான படைப்புகளை வரவேற் கின்றேன்.

நான் என் இதயத்தின் அன்பான இடத்திலிருந்து பேசுகின்றேன், அன்பு எல்லாவிதமான கதவு களை திறக்கின்றது என்பதை நான் அறிவேன்.

இன்று யாரும், எந்த இடமும், பொருளும் என்னை தொந்தரவு செய்யவில்லை.

நான் எங்கு சென்றாலும் என்னை சுற்றி அன்பு நிறைந்துள்ளது.

மற்றவர் மேல் அன்பு காட்டுவது சுலபம் ஆனால் நான் என் மீதும் அன்பு காட்டுகின்றேன்.

எனக்குள் இருக்கும் தைரியம், வெறி என்னுடைய குறிக்கோளை அடைய வைக்கின்றது.

என்னுடைய மனம் நல்லெண்ணங்களில் மூழ்கி சந்தோஷம் அடைகின்றது.

என்னுடைய முழுமையான உழைப்பை பயன் படுத்தி என் குறிக்கோளை அடைவதற்கான செயலை செய்கிறேன்.

எனக்கு பிடிக்கும் சந்தோஷமான விஷயங்களை செய்து வாழ்க்கையை கொண்டாடுகின்றேன்.

நான் எந்த பிரச்சினையில் இருந்தாலும் என் மன நிலை சீராக, அமைதியாக இருக்கின்றது.

எனக்கு பதினாறு செல்வங்களில் உள்ள அனைத்து செல்வங்களும் என்னிடம் வருகின்றது.

எனக்கு எப்படி சுவாசிப்பது சுலபமாக இருக்கி றதோ அதேபோல பணமும் சுலபமாக கிடைக்கின் றது.

நான் தோல்வியடைந்த தருணத்தை நினைத்து ஏன் தோல்வி அடைந்தேன் என ஆராய்ந்து என்னை மாற்றியமைத்துக் கொள்கிறேன்.

இந்த உலகில் உள்ள அனைவருமே என்னிடம் நல்லெண்ணத்தோடு பழகுகின்றனர்.

எனக்குத் தேவைப்படும் விஷயங்களில் கவனம் செலுத்தி அதில் தெளிவு பெறுகின்றேன்.

எனக்கு கிடைத்த சின்ன சின்ன பொருட்களுக்கும், சின்ன சின்ன விஷயங்களுக்கும் நன்றி செலுத்துகின்றேன்.

இந்த நாட்டின் விவசாயிகள் வாழ்க வளமுடன், ராணுவ வீரர்கள் வாழ்க வளமுடன்.

என் அப்பா, அம்மா, குடும்பம் வாழ்க வளமுடன், வாழ்க வளமுடன், வாழ்க வளமுடன்.

எது எனக்கு கிடைத்திருக்கிறதோ அதற்காக கடவுளுக்கு கோடிக்கணக்கான நன்றி, நன்றி, நன்றி.

என் உடலை கச்சிதமாக, ஆரோக்கியமாக, சிறப்பாக படைத்த கடவுளுக்கு நன்றி, நன்றி, நன்றி.

நான் சிறப்பாக பிறந்திருக்கிறேன் நான் என்னை நினைத்து பரிபூர்ண திருப்திக்கொள்கிறேன்.

இதுவரை கிடைத்துள்ள உதவிகளுக்கு நன்றி நன்றி நன்றி.

நான் போதுமானதை விட அதிகமாகவே இருக்கின்றேன்.

என் திறமைகளை தெரிந்து கொள்வதற்கான சந்தர்ப்பங்கள் எனக்கு கிடைக்கின்றது.

என்னுடைய வாழ்க்கையை நான் சிறப்பாக வாழ்கின்றேன்.

நான் எப்படி எல்லாம் வாழ வேண்டும் என்ற புரிதல் எனக்கு கிடைக்கின்றது.

வெற்றி அடைந்தாலும் சரி, தோல்வி அடைந்தாலும் சரி நான் சந்தோஷமாக தான் இருக்கின்றேன்.

இம்மாதம் என் வருமானம் இரண்டு மடங்காக உயர்கின்றது.

வாழ்க்கையை பற்றி தெரிந்துக் கொண்டதால் தான் அதை பற்றிய கவலை எனக்கு குறைந்து கொண்டிருக்கின்றது, மனம் லேசாக மாறியிருக் கின்றது.

எனக்கு வாழ்க்கை பற்றிய கவலை பெரிதாக இப் போது இல்லை.

என்னுள் இருக்கும் தீய எண்ணங்கள் கொஞ்சம் கொஞ்சமாக என்னை விட்டு செல்கின்றது.

என்னால் எதை வேண்டுமானாலும் அடையும் திறமை இருக்கின்றது அதை அடைய என் மனதை தயார்படுத்தி சுலபமாக செய்து முடிக்கின்றேன்.

நான் எந்த வித பயமும் இல்லாமல் நான் நானாக இருப்பதில் மகிழ்ச்சி அடைகின்றேன்.

எனக்கு உடனே அனைத்தும் வேண்டுமென்ப தில்லை பொறுமையாக கூட அனைத்தையும் முடிக்கும் திறன் உள்ளது.

நான் ஒரு தெய்வீகமான படைப்பு, கடவுளின் ஒரு பகுதி, அதனால் எவ்வாறு நான் தகுதி அற்றவனாக இருக்க முடியும்.

நான் அளவற்ற ஏராளமான செழிப்புடன் இணைந்து விட்டேன்.

எனக்கு எல்லையற்ற பிரபஞ்சத்தின் வாய்ப்புகளை பெற அனுமதி இருக்கின்றது.

என்னுடைய பலம், நான் பிரபஞ்சத்தோடு இணைப்பு இருப்பதால் கிடைக்கின்றது.

நான் எதை செய்தாலும் வயது ஒரு தடையில்லை.

நான் தெய்வீக விதிகளின்படி என் வாழ்க்கையை வாழ்ந்துக் கொண்டிருக்கின்றேன்.

நான் இப்போது என்ன செய்யமுடியும் என்பதைப் பற்றி மட்டும் நினைக்கிறேன்.

சிறியதாக சிந்திப்பதன் மூலம் பெரிய காரியங்களை செய்கின்றேன்.

என் வாழ்க்கையை நினைக்கும்போதெல்லாம் உற்சாகமும், சுவாரஸ்யமும் நிறைந்து வழிகின்றது.

என் வாழ்க்கை அனுபவங்களுக்கு நான் நன்றி உள்ளவனாக இருக்கிறேன்.

நான் எப்போதும் குறிக்கோளோடு இருப்பதால் தனியாக இல்லை என்பது எனக்கு தெரியும்.

நான் மனதில் போட்ட இலக்கை, என்னால் பெற முடியும் என்பதும் எனக்கு தெரியும்.

நான் இன்று செயல்படுத்திய விஷயங்கள் இப் போது போதும் மீதமிருக்கும் நேரத்தில் ஓய்வு எடுப் பதிலும், ஆற்றலை பெருக்குவதிலும் அனுபவிக் கின்றேன்.

வாழ்க்கையில் நான் நிகழ்த்திய எல்லாவற்றிற்கும் நன்றியுள்ளவனாக இருக்கின்றேன்.

நான் யாரைப் போல் இருக்க விரும்புகிறேனோ அவரைப்போல் பிரதிபலிக்கும் வகையில் எனது சுய உருவத்தை தொடர்ந்து மேம்படுத்துகின்றேன்.

எல்லாவற்றிலும் உள்ள நல்லவற்றுடன் நான் இணக்கமான உறவில் இருக்கிறேன்.

எல்லாவற்றிலும் நல்லது என்னை நோக்கி நகர்த் துகிறது.

உற்சாகமாக வாழ என்னை நான் மேம்படுத்திக் கொண்டு வருகிறேன்

என் மனம் தெய்வீக செயல்பாட்டின் மையம் என் பதை நான் அறிவேன்.

நான் என் பயத்தை எதிர் நோக்கி செல்வதால் என் கனவுகளை வாழ முடிகின்றது.

நான் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வகையிலும் அருமையாக உணருகின்றேன்.

நான் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வகையிலும் சிறப்பாக உணருகின்றேன்.

என் எண்ணங்கள், உணர்வுகள் மற்றும் செயல்கள் என் வாழ்க்கையில் நிலையான மற்றும் அதிகரிக் கும் செழிப்பை உருவாக்குகின்றன.

ஒவ்வொரு நாளும் புதிய பழக்கங்களை தவறா மல் கடைப்பிடிப்பதால் நான் என் குறிக்கோளை நெருங்கி செல்கின்றேன்.

நான் மிகுந்த ஆச்சரியம் அடைகிறேன் ஏனென் றால் நான் விரும்பும் நபர் தான் நான்.

மிக பிரம்மாண்டமான படைப்பு எனது திறன்களும் ஆற்றல்களும், அது எல்லையற்றவை.

நான் எப்போதும் கற்கிறேன், வளர்க்கின்றேன், சிறப்பாக மாறுகிறேன்.

என் வாழ்க்கையில் நடக்கும் அனைத்து விஷயங் களுக்கும் நான் தகுதியானவன்.

நான் என்னிடத்திலும் பிறர் இடத்திலும் நல்லதை மட்டுமே காண்கிறேன்.

என் ஆளுமை, நம்பிக்கை, உறுதி அனைத்தும் இப்போது என்னிடம் ஒளிர்ந்துக் கொண்டிருக்கி றது.

என் மனம் முழுவதும் ஆரோக்கியம், அன்பு, வளமான எண்ணமே தொடர்ந்து நிரம்பி வழிகின் றது.

நல்ல நல்ல எண்ணங்களால் நான் மூழ்கடிக்கப்ப டுகிறேன்.

நான் அளவில்லாத அன்பை வாரி வழங்க எனக்கு ஓர் வாழ்க்கை துணை கிடைக்கிறார்.

நிறைவான வாழ்க்கை, நிறைவான செல்வம் என் னிடம் நிறைந்துக் கொண்டிருக்கின்றது.

நான் எப்போதும் கொடுக்கவே நினைக்கிறேன் அதனால் எனக்கு பல மடங்கு கிடைக்கின்றது.

நான் தாராளம், அளவில்லாத, எல்லையற்ற, வரம் பில்லாத, கணக்கிலடங்காத கடவுளின் சக்தி.

என் சக உறவுகளுக்கு சிறந்த சேவை அளிக்கப் பிறந்துள்ளேன்.

நான் எனக்கு என்பதை மாற்றி நமக்கு என்று நினைக்கிறேன்.

என்னுடைய சிறப்பான படைப்புகளை உருவாக்கி மக்களுக்கு வழங்குகின்றேன்.

நான் நேரம் கிடைக்கும் போதெல்லாம் தியானத் தில் மூழ்கி விடுகின்றேன்.

நான் என்னுடைய எல்லை இல்லாத கடவுளின் சக்தியை பயன்படுத்துகிறேன்.

இப்போது என்னுள் நான் ஆனந்தமாக இருக்கின் றேன்.

எல்லாவற்றிலும் உள்ள நல்லவற்றுடன் நான் இணக்கமான உறவில் இருக்கிறேன்.

கோடிக்கணக்கில் சம்பாதிக்கும் மனிதர்கள் என் னுடன் பழகுகின்றனர் அவர்களின் ரகசியங்களை எனக்கு தெரிவிக்கின்றனர்.

எனக்கு கவனிக்கும் திறன் அதிகமாகிறது, மற்ற வர்கள் கூறும் விஷயங்களை கவனித்து புரிந்துக் கொள்ள முடிகின்றது.

நான் முழுமையான உடல் நலத்துடன் நன்றாக இருக்கின்றேன்.

நான் அனைவரையும் கவர்ந்திழுக்கும் ஆளுமை யுடன் இருக்கின்றேன்.

தொடங்குவதற்கு எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளத் தேவையில்லை என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

என் வழியில் வரும் ஒவ்வொரு வாய்ப்பிலும் நான் செயல்படுகிறேன்.

நான் வேண்டுமென்றே செயல்படுகிறேன் விஷயங் களை செய்து முடிக்கிறேன்.

நேர்மறையான நடவடிக்கை எடுக்க நான் எப்போ தும் தூண்டப்படுகிறேன்.

எனது குறிக்கோளை அடைய எதை வேண்டுமா னாலும் செய்ய தயாராக இருக்கிறேன்.

எனது குறிக்கோளில் நூறு சதவிகிதம் முயற்சியை எடுக்க நான் கடமைப்பட்டுள்ளேன்.

எனது மொத்த சக்தியையும் நேர்மறையான செயல்களை நோக்கி செலுத்துகிறேன்.

நான் எடுக்கும் ஒவ்வொரு நேர்மறையான செய லால் நான் முற்றிலும் உற்சாகம் அடைகிறேன்.

செயல்கள் எப்போதும் சொற்களை விட சத்தமாக பேசுவதை நான் அறிவேன்.

நான் தொடர்ந்து முன்னேறி அதன் மூலம் மட்டுமே ஆதாயங்கள் கிடைக்கும் என்பதை நான் அறி வேன்.

செயலுக்கு ஒரே நேரம் இப்போது தான் என்பது எனக்குத் தெரியும்.

ஒவ்வொரு செயலையும் திறமையான செயலாக மாற்றுகிறேன்.

நான் இடைவிடாமல் என் கனவை நோக்கி உழைக்கிறேன்.

செயல்களை மேம்படுத்துவதில் மட்டுமே சக்தியை செலவிடுகிறேன்.

நான் குறைவாக பேசுகிறேன், அதிகமாக செய்கி றேன்.

நான் குறைவாக யோசிக்கிறேன், அதிகமான நடவ டிக்கை எடுக்கிறேன்.

நான் என்னுடைய நேரத்தை செயலாக மாற்றுகி றேன்.

எனது எண்ணங்களும், செயல்களும் எனது எதார்த்தத்தை உருவாக்குகின்றன.

நான் யார் என்பதை என் வார்த்தைகளும் செயல் களும் தீர்மானிக்கின்றன.

புத்திசாலித்தனமான நடவடிக்கை மூலம் நான் இப்போது விரும்பும் சூழ்நிலையை உருவாக்கு கின்றேன்.

இன்று எனது இலக்குகளை நிறைவேற்ற வேண்டு மென்றே நடவடிக்கை எடுத்து வருகிறேன்.

இன்று எனது குறிக்கோளை நோக்கி இன்னும் ஒரு படி மேலே மகிழ்ச்சியாக செல்கிறேன்.

நான் எப்போதும் என் உடலுக்குத் தேவையான உணவைத் தருகிறேன்.

நான் என் வாழ்க்கையை சிறப்பாக மாற்றிக் கொண்டிருக்கின்றேன்.

எனக்கு நம்ப முடியாது சுயகட்டுப்பாடு இருக்கின் றது.

பழைய கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளை நான் நன்றியுடன் விட்டுவிடுகிறேன்.

என்னை முன்னேறவிடாமல் தடுக்கும் எண்ணங் கள் அனைத்தும் என்னை விட்டு விலகுகின்றது.

மாற்றத்தின் சக்தியை என் மனதில் வைத்திருக்கி றேன்.

கடந்தகால பழக்கவழக்கங்களில் இருந்து நான் முழுமையாக தூய்மையடைகிறேன்.

கெட்ட பழக்கங்களை நான் குறைப்பதன் மூலம் அதை உடைக்கின்றேன்.

நான் என்னை அளவில்லாமல் விரும்பிக் கொண் டிருக்கின்றேன்.

நான் ஒரு காந்தம் போல நேர்மறை ஆற்றல்களை ஈர்க்கின்றேன்.

# சினிமா துறையில் ஆக்டர் அவதற்கான பயிற்சி

இந்த பயிற்சி செய்வதற்கு முன் இயற்கை சூழல் பயிற்சியை செய்யவேண்டும். ஏனென்றால் அப் போது தான் இந்த பயிற்சி சிறப்பான பலன் அளிக் கும்.

நான் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருப்பதற்காக கட வுளுக்கு நன்றி, நன்றி, நன்றி.

நான் அமைதியாகவும், நிம்மதியாகவும் இருக்கின் றேன்.

எனக்கு கிடைத்துக் கொண்டிருக்கும் அனைத்து நல்ல விஷயங்களுக்காகவும் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன்.

பிரபஞ்சத்தின் அன்பும், அரவணைப்பும், பாசமும், ஆசீர்வாதமும், வழிகாட்டுதலும் எனக்கு எப்போ தும் கிடைத்துக் கொண்டிருக்கின்றது.

நான் வசீகரமாகவும், கவர்ச்சியாகவும் இருந்து வருகிறேன்.

நான் நல்லெண்ணம் கொண்ட மக்களை என்னிடம் கவர்ந்து இழுக்கின்றேன்.

நான் என் மேல் சுய மதிப்புடனும், மரியாதையுடனும் இருந்து வருகிறேன்.

நான் இப்பொழுது ஆரோக்கியமாக இருக்கிறேன்.

நான் நினைத்த எடையோடு இருக்கிறேன்.

என்னுள் பயங்கள் விலகி அங்கு தைரியம் வளர்ந்து கொண்டிருக்கின்றது.

நான் எப்போதும் சந்தோஷமாகவும், மகிழ்ச்சியாகவும், உற்சாகமாகவும் இருக்கிறேன் ஏனென்றால் என்னுள் இருக்கும் திறமையான நடிப்பை நான் இப்பொழுது வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றேன்.

என்னை சினிமாவில் நடிக்க சொல்லி டைரக்டர்களும், அசிஸ்டண்ட் டைரக்டர்களும் என்னை அழைக்கின்றனர். நடிக்கிறேன், அதன்மூலம் நிறைய பணத்தை சம்பாதிக்கின்றேன் (20 முறை).

என் நடிப்பு திறமைக்கு ஏற்ற கதாபாத்திரம் எனக்கு கிடைத்துக் கொண்டிருக்கின்றது.

நான் அதிக சந்தோஷமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறேன் ஏனென்றால் சினிமாவில் இப்போது நடித்துக் கொண்டிருக்கின்றேன். பிரபஞ்சத்தின் துல்லியமான வழிகாட்டுதலால் இது நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது. அதற்காக நன்றி நன்றி நன்றி (10 முறை).

எனக்கு கிடைக்கும் நடிப்பு வாய்ப்புகளை உடனடியாக பயன்படுத்தி வெற்றி பெறுகிறேன்.

நான் இப்போது மூன்று படங்களில் புக்காகி இருக்கிறேன்.

நான் சினிமாவில் நடிப்பதன் மூலம் நிறைய பணத்தை சம்பாதித்துக் கொண்டிருக்கின்றேன்.

நான் சினிமாவில் நடிக்க என் பெற்றோர்கள் ஆதரிக்கின்றனர், நானும் அவர்களை மதிக்கிறேன்.

மக்கள் என்னை சினிமாத் திரையில் பார்க்க விரும்புகின்றனர்.

நான் கேமராவில் நடிக்கும்போதும், பேசும்போதும் சிறப்பாக செயல்படுகிறேன்.

அதனால் என்னை எனக்கே மிகவும் பிடிக்கிறது.

நான் ஒரு சிறந்த நடிகன் கடவுளின் வசீகரம் என்னுள் நிறைந்து வழிகின்றது.

செல்வமும், செழிப்பும், வளமும், ஆரோக்கியமும் நிறைந்து வழிகின்றது.

நான் சிறப்பான நடிகனாக வளர்ந்து கொண்டிருப்பதை என்னால் கண்கூடாக பார்க்க முடிகின்றது.

மக்கள் என்னை பார்க்கும்போதெல்லாம் செல்பி எடுக்கின்றனர், மகிழ்கின்றனர்.

இவை அனைத்தும் என் நிஜ வாழ்க்கையில் நடப்பதை என்னால் உணர முடிகின்றது.

# கனவு வேலையை பெறுவதற்கான பயிற்சி

இந்த பயிற்சி செய்வதற்கு முன் இயற்கை சூழல் பயிற்சியை செய்யவேண்டும். ஏனென்றால் அப் போது தான் இந்த பயிற்சி நல்ல பலன் அளிக்கும்.

- ❖ என் தகுதிக்கும், திறமைக்கும் ஏற்ற வேலை வாய்ப்புகள் என்னிடம் வந்துக் கொண்டிருக் கின்றன.
- ❖ நான் என் வேலைக்கேற்ற தகுதியை வளர்த் துக் கொண்டு இருக்கின்றேன்.
- ❖ கடவுள் எனக்காக வேலையை இப்போது திறந்து விடுகிறார்.
- ❖ என்னுள் இருக்கும் வேலை பற்றிய தடைகள் அனைத்தும் என்னிடமிருந்து விலகி நிற்கின் றன.
- ❖ நான் என் மேல் மதிப்பும், மரியாதையும் அதிக மாக வைத்துக் கொண்டிருக்கிறேன்.
- ❖ நான் என்னை பாராட்டிக்கொள்கிறேன் நான் என்னை தைரியப் படுத்திக் கொள்கிறேன்.

- ❖ நான் அதிக சந்தோஷத்தோடும், மகிழ்ச்சியோடும் இருக்கிறேன் ஏனென்றால் “நான் நினைத்த வேலை இப்பொழுது எனக்கு கிடைத்து விட்டது” (20 முறை).
- ❖ நான் எப்போதும் நல்ல மனிதர்களையும், நல்ல சூழ்நிலைகளையும் என் பக்கம் இருக்கிறேன்.
- ❖ எனக்கு இப்போது கிடைத்த வேலையில் சந்தோஷமும், நன்றியும் நிறைந்து வழிகின்றது.
- ❖ நான் எனக்குள்ளும், வெளியிலும் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் வாழ்க்கையை கொண்டாடிக் கொண்டு இருக்கின்றேன்.
- ❖ எனக்குள் இருக்கும் தன்னம்பிக்கையை போற்றுகிறேன்.
- ❖ என் தன்னம்பிக்கையை என் வேலையை நிர்ணயிக்கின்றது.
- ❖ எந்த செயலையும், தன்னம்பிக்கையோடு செயல்படுத்தி வெற்றி பெறுகிறேன்.
- ❖ என் குறிக்கோள் அனைத்தும் விடாப்பிடியான தன்னம்பிக்கையுடன் அடைந்து விடுகிறேன்.
- ❖ நான் அதிக தன்னம்பிக்கையோடு வாழ்ந்துக் கொண்டிருக்கிறேன்.

# கடனைத் தீர்க்க ஒரு சிறப்பான வழி

உங்களுடைய கடனை நீங்கள் தினமும் நினைத்து நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களா அப்படி என்றால் அதை தீர்ப்பதற்கான நேரம் இப் பொழுது வந்துவிட்டது.

கடனைப் பற்றி யோசித்துக்கொண்டே இருக்கும் அதேவேளையில் கடனை எப்படி தீர்க்க வேண் டும் என்ற ஒரே மனநிலையை நீங்கள் உருவாக் கிக் கொள்ளவேண்டும். கடன் உங்களை கவலை யின் ஆழத்தில் கொண்டு செல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

கடனை மனதிற்குள் போடாமல் நீங்கள் மூளை யில் போட்டு அதை யோசிக்க வேண்டும் ஏன் கடன் வந்தது? எதற்காக வந்தது? எப்படி இதை அடைக்க முடியும்? என்று நீங்கள் யோசித்து செயல் பட வேண்டும் அது மட்டுமில்லாமல் கடனை அடைக்க முக்கியமான ஒரு வழி என்னவென்றால் எவ்வளவு கடன் இருக்கிறது என்பதை ஒரு நோட் டுப் புத்தகத்தில் எழுதிக் கொள்ளவேண்டும்.

அந்த கடனை யார் யாருக்கு எவ்வளவு பணம் நீங்கள் கொடுக்க வேண்டும் என்பதையும் அதில் எழுதிக்கொள்ள வேண்டும் அதை எழுதிய பின் நீங்கள் வாங்கிக் கொண்டிருக்கும் உங்கள் சம்பள பணமோ அல்லது நீங்கள் தொழில் செய்து கொண்டு இருக்கிறீர்களோ எதுவென்றாலும் பர வாயில்லை. உதாரணமாக ஒரு வேலை செய்து கொண்டிருக்கிறீர்கள் அந்த வேலையில் உங்க ளுக்கு போதுமான வருமானம் இல்லை என்றால் அந்த வருமானத்தை நீங்கள் உயர்த்திக்கொள்ள மும்முரமாக இருக்கவேண்டும் அதை எப்படி உயர்த்த வேண்டும் என்பதை நீங்கள் யோசிக்க வேண்டும்.

முதலில் நீங்கள் ஒரு 30 ஆயிரம் ரூபாய் சம்பாதித் துக் கொண்டு இருக்கிறீர்கள் உங்கள் கடன் ஒரு பத்து லட்சம் ரூபாய் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். 30 ஆயிரத்தை வைத்து 10 லட்சம் ரூபாய் கடனை எப்படி அடைக்க வேண்டும் என் பதை யோசிக்க வேண்டும் அப்படி இல்லை என் றால் உங்களுடைய வருமானத்தை நீங்கள் பெருக் கிக் கொள்ள வேண்டும்.

30 ஆயிரத்திலிருந்து 50 ஆயிரம், 60 ஆயிரம் என்று உங்களுடைய வருமானத்தை நீங்கள் பெருக்கிக் கொண்டீர்கள் என்றால் அந்த கடனை நிச்சயமாக 6 மாதத்தில் இருந்து ஒரு வருடத்திற்குள் நீங் கள் அதை அடைத்து விடுவீர்கள் முதலில் வருமா னத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும்.

வருமானத்தை உயர்த்தியும் உங்களுக்கு கடன் பிரச்சினை இருக்கிறது என்றால் ஒரு தனித்துவ மாக யோசித்து ஒரு சின்ன தொழிலை பகுதி நேர மாக நீங்கள் செய்யவேண்டும் அந்த தொழிலுக்கு

நிறைய முதலீடு போடாமல் நீங்கள் உடனடியாக அந்த தொழிலை நீங்கள் செய்யவேண்டும்.

உதாரணமாக,

- ❖ வெப்டிசைனிங் செய்து கொடுக்கலாம்
- ❖ யூடியூப் சேனல் ஆரம்பிக்கலாம்
- ❖ பார்ட் டைமில் டேட்டா என்ட்ரி வேலை செய்து கொடுக்கலாம்
- ❖ மோட்டிவேஷன் ஸ்பீச் கொடுக்கலாம்
- ❖ ஃபினான்சியல் ஆலோசகராக இருக்கலாம்
- ❖ ஒரு ஹோட்டலில் வேலை செய்யலாம்
- ❖ ரிசார்ட்டில் வேலை செய்யலாம்
- ❖ ஸ்டார்பக்ஸில் பார்ட் டைமாக வேலை செய்ய லாம்
- ❖ கன்டென்ட் கிரியேஷன்ஸ் செய்து கொடுக்க லாம்
- ❖ ஊதுபத்தியை தயார் செய்து கொடுக்கலாம்
- ❖ மெக்கானிக் வேலை செய்யலாம்
- ❖ மீன் கடைக்கு வேலைக்கு செல்லலாம்
- ❖ தின்பண்டங்களை உருவாக்கி விற்கலாம்
- ❖ ஊர்காய்களை உருவாக்கியிருக்கலாம் விற்க லாம்
- ❖ மேஸ்திரி வேலை செய்யலாம்
- ❖ ஷேர் மார்க்கெட் செய்யலாம்
- ❖ ஹை டிக்கெட் சேல்ஸ் பண்ணலாம்
- ❖ தோல் பொருட்களை வியாபாரம் செய்யலாம்
- ❖ வீட்டிலேயே துணி வியாபாரம் செய்யலாம் அல்லது துணிக்கடை வைக்கலாம்

இப்படி நீங்கள் ஒரு வேலை செய்துகொண்டு மறு புறத்தில் தொழிலை நீங்கள் ஆரம்பித்தால் நிச்சய மாக உங்களுடைய கடனை ஒரு வருடத்திற்குள் அடைத்து முடித்துவிட முடியும் அதாவது வேறு

விதமாக இதை சிந்திப்பது தான் மிகவும் அவசிய மான ஒரு விஷயம்.

வேலையையும் நீங்கள் செய்து கொண்டிருக்க வேண்டும், அது மட்டுமில்லாமல் ஒரு சிறு தொழி லையும் செய்யும் பொழுது உங்களுடைய கடனை நீங்கள் அடைத்து விட முடியும். முக்கியமாக இதில் கூறப்பட்டிருக்கும் ஏதாவது ஒரு தொழில் அல்லது உங்களுக்கு தெரிந்த ஏதோ ஒரு தொழில் இருந் தால் அதன்மூலம் ஒவ்வொரு மாதமும் உங்க ளுக்கு பணம் கிடைக்கும்.

இந்த எக்ஸ்ட்ரா பணத்தை சேமித்து வைத்து உங் களுடைய கடனை அடைக்க நீங்கள் மும்முரமாக இருக்க வேண்டும். யார் யாருக்கு எவ்வளவு பணம் நீங்கள் கொடுக்க வேண்டும் என்ற அந்த அட்ட வணையை எடுத்து உங்களுடைய சுவற்றில் மாட்டி அதை தினமும் நீங்கள் பார்த்து வரவேண்டும் தின மும் பார்த்து அதை அடைப்பதற்கு நீங்கள் தயாராக இருந்து மும்முரமாக செயல்பட்டு அதை நீங்கள் அடைத்து விட வேண்டும் (இதை முழுமையாக அடுத்த அத்தியாயத்தில் கொடுத்திருக்கிறேன்).

அது மட்டுமில்லாமல் இந்த வாக்கியத்தை நீங் கள் பலமுறை சொல்லவேண்டும் *“என்னுடைய மொத்த கடனையும் நான் இந்த வருடத்திற்குள் அடைத்து முடித்திருப்பேன்”* என்று ஒரு வாக்கி யத்தை உருவாக்கி அதை நீங்கள் செயல்படுத்த வேண்டும் அதை நீங்கள் தினமும் 10 முறை கண் ணாடி முன் நின்று அதைத் தொடர்ந்து கூற வேண் டும். அதை பலமுறை கூறிவரும் பொழுது உங்களு டைய கடன் பிரச்சினை முழுமையாக தீரும்.

உங்களுடைய தொழில் மற்றும் உங்களுடைய வேலையில் வளர்ச்சி அதிகமாகும் கடனைத் தீர்த்து விடுவீர்கள் இதை இப்போதே செயல்படுத் துங்கள்.

# சக்தி வாய்ந்த மன திரைகளை பயன்படுத்தி கடன் பிரச்சனைகளை அடைக்கும் இரகசியம்

எப்போதும் உங்களை ஏழையாக உணர வைப்பது கடன்கள் தான். முதலில் உங்களுடைய கடன்களை ஒழித்துக் கட்ட வேண்டும். அப்போது தான் மற்றதை உங்களால் தெளிவாக யோசிக்க முடியும், இல்லையேன்றால் அந்த எண்ணங்கள் உங்களை திரும்பத் திரும்ப பாதிக்கும்.

*பயிற்சியின் விளக்க முறை:*

இப்போது உங்களுடைய கடன்களை பற்றி பார்ப் போம். எத்தனை பேர்களுக்கு கடன் தர வேண் டும் என்று பட்டியலிட்டுக் கொள்ளுங்கள். உதார ணமாக கீழே உள்ள படி இருக்க வேண்டும்.

- முதலாம் நபரிடம் 1.5 லட்சம் திருப்பி ரூபாய் கொடுக்க வேண்டும்
- இரண்டாம் நபரிடம் 97 ஆயிரம் ரூபாய் திருப்பி கொடுக்க வேண்டும்
- மூன்றாம் நபரிடம் 65 ஆயிரத்து 600 ரூபாய் திருப்பி கொடுக்க வேண்டும்
- நான்காம் நபரிடம் 42,500 ரூபாய் திருப்பி கொடுக்க வேண்டும்
- ஐந்தாம் நபரிடம் 55,000 ரூபாய் திருப்பி கொடுக்கவேண்டும்

இவ்வாறு நீங்கள் தர இருக்கும் மனிதர்களும், அவர்களுடைய பணத்தையும் பட்டியலிடுங்கள்.

மொத்தமாக ரூபாய் 6 லட்சம் என வைத்துக் கொள்ளுங்கள் அதேபோல் உங்களிடம் பத்து லட் சம் இருப்பதாக கற்பனை செய்து கொள்ளுங் கள். இது மிகவும் தெளிவாக இருக்கவேண்டும். கண்களை மூடிக்கொண்டு அமைதியாக ஓய்வாக இருந்து அப்படியே உங்களுடைய மனத்திரையில் நான் இந்த நபரிடம் ரூபாய் 1.5 லட்சம் கத்தையாக, 2000 ரூபாய் கொண்ட 75 நோட்டுகளை அவரிடம் கொடுத்துவிட்டு திருப்தியுடனும், மகிழ்ச்சியுடனும் இருப்பது போன்று பாருங்கள்.

இரண்டாவது நபரிடம் ரூபாய் 37,000 தருவதாக அப்படியே துல்லியமாக கற்பனை செய்யுங்கள்.

இதில் மிகவும் முக்கியமாக எந்த இடத்தில் தரப் போகிறீர்கள், எப்போது தரப் போகிறீர்கள் என்

பதை எல்லாம் இந்த மன காட்சிகளில் செய்து பார்க்கவேண்டும்.

இவ்வாறு ஒவ்வொரு நபர்களுக்கும் நீங்கள் எவ்வளவு பணம் தரவேண்டும் என்பதையும் எந்த இடத்தில் தரப்போகிறீகள் என்பதையும் மனக்காட்சிகளை செய்து கொண்டே இருக்க வேண்டும்.

இதில் முக்கியமாக நீங்கள் எதை கற்பனை செய்கிறீர்களோ, அதுதான் உங்கள் நிஜத்தில் நடக்கும் இது நிச்சயமான உண்மை தன்மையை கொண்டது.

இன்னும் முக்கியமாக உங்களுடைய மனதில் 1.5 லட்ச ரூபாய் பிரச்சனைக்கும் தீர்வு கிடைக்கும், அதே போல் 10 லட்ச ரூபாய் பிரச்சினைகளுக்கும் தீர்வு கிடைக்கும் என புரிந்துக் கொள்ள வேண்டும். அதனால் எதை எப்படி கேட்கவேண்டும் என்பதை தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

எப்படி ஒரு தோட்டத்தில் நீங்கள் விதைத்த விதை மரமாக மாறுகிறதோ அதேபோல் தான் நாம் மனதில் நினைக்கும் நல்ல எண்ணங்களும் நம் நிஜ வாழ்க்கையில் நடக்கக்கிறது.

கடன் கொடுத்த காட்சிகளை மனதில் உண்மையாகவே நிஜ உலகில் நடப்பதைப் போலவே பார்க்க வேண்டும் மற்றும் வாழ வேண்டும் இதை தொடர்ந்து 5 முதல் 10 முறை பார்க்கவேண்டும் ஒரு முறை பார்க்க இரண்டு முதல் நான்கு நிமிடங்கள் எடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்த காட்சிகளை மனதில் பார்க்க கஷ்டமாக இருந்தால் உங்களிடம் இப்படி கூறிக் கொள்ளுங்கள். “நான் இப்போது இந்த நபருக்கு 1.5 லட்ச ரூபாய் இப்போது தருகிறேன்”.

இப்படி வார்த்தைகளை கூறி மன காட்சிகளை உருவாக்கி பார்த்து வாருங்கள். இந்த காட்சிகள் அனைத்தும் நிஜ உலகில் அப்படியே நடைபெறும்.

அதுமட்டுமன்றி அவை அனைத்தும் சக்திவாய்ந்த ஆற்றல் கொண்டது. அதன் மூலம் மூளையை தூண்டி விட்டு அதற்கு தகுந்த, அதே மாதிரியான விடையை தந்தே தீரும்.

# உங்களுடைய பணக்கார, கோடிஸ்வர வாழ்க்கையை இப்படி உருவாக்கலாம்

நீங்கள் பணக்கார வாழ்க்கை வாழ வேண்டுமென்றால் தெளிவான நோக்கமும் தொடர்ந்து உங்களுடைய உண்மையான பார்வையையும் அவர்களுடைய மன போக்கிலேயே இருக்க வேண்டும் எப்போதும் எல்லா நேரங்களிலும் உங்களை மிகப் பெரும் செல்வந்தராக கற்பனை செய்து பழக வேண்டும்.

நீங்கள் வாழ்க்கையில் அடிமட்டத்தில் இருந்தாலும் சரி, நீங்கள் பணக்காரன் என்ற அசைக்க முடியாத தன்னம்பிக்கை உங்களை மூழ்கடித்துக் கொண்டே இருந்தால் போதுமானது.

உங்களுடைய நோக்கம் இப்படி தெளிவாக இருப்பது உங்களின் நோக்கத்தை வேகமாக அடைய செயல்படுத்தும். *"நான் என்னுடைய 27* அல்லது *30* அல்லது *35* அல்லது *40* அல்லது 45 வயதிற்குள் கோடீஸ்வரனாக இருப்பேன்*"*.

உங்களுடைய தெளிவான இந்த இலக்கு உங்களுடைய மனதில் பிரகாசமான வருங்காலத்தை உருவாக்க வழிவகுக்கும்.

உண்மையில் நீங்கள் பணக்காரராக இருந்தால் என்ன மற்றவருக்கு செய்வீர்கள், எப்படி உங்களுடைய பணக்கார வாழ்க்கையை வாழ்வீர்கள் என்று நினைத்து முழுக்க முழுக்க அந்த எண்ணத்துடன் நீங்கள் வாழ வேண்டும்.

## *உங்களுடைய வாழ்க்கையை அதிக மதிப்பு வாய்ந்ததாக மாற்றுங்கள்*

உங்களையே நீங்கள் கேட்டுப் பாருங்கள் நான் எதையெல்லாம் வைத்திருந்தால் பணக்காரன் என்ற உணர்வை அதன்மூலம் பெறுவேன் மற்றும் அதற்கான பல பதில்கள் உங்களுக்கு பிறக்கும் சில பேர் இப்படி கூறுவர்.

நான் வசதியான கார், வீடு இருந்தால் பணக்காரன், நான் கட்டுக்கட்டாக பணம் வைத்திருந்தால் பணக்காரன், செல்வாக்கு இருந்தால் செல்வந்தன், உண்மையில் இவை அனைத்தும் இருந்தால் பணக்காரர்கள். ஆனால் பணக்காரரை பற்றின பல படங்கள் மனதில் வேரூன்றி இருக்க வேண்டும். அந்த பணக்கார தன்மைக் கொண்ட கற்பனை

காட்சிகளை உங்களுக்குள் தினமும் பதிய வைத்துக் கொண்டே இருக்க வேண்டும்.

அது மட்டுமன்றி அதிகமான பணம் சம்பாதிக்க வேண்டுமென்றால் அதிக மதிப்பு வாய்ந்த சேவைகளை நீங்கள் மற்றவர்களுக்கு வழங்க வேண்டும்.

உண்மையில் நாம் உருவாக்கும் அனைத்து பொருட்களும் மக்களுக்காக தான் படைக்கப்படுகின்றது. நீங்கள் எந்த அளவு உயர்வான அதிக மதிப்பு வாய்ந்த சேவைகளையும், பொருட்களையும் தருகிறீர்களோ அதற்கேற்ப தான் உங்கள் வாழ்க்கை மதிப்பு வாய்ந்ததாக மாறும். உதாரணமாக ஆப்பிள் ஃபோன் மற்ற ஃபோன்களை விட அதிக மதிப்பு வாய்ந்தவை அந்த மாதியான மதிப்பை வாய்ந்த சேவையை வழங்க வேண்டும்.

## *உங்களிடம் கேட்டுக் கொள்ளுங்கள்:*

ஒரு வேளை “உண்மையில் நீ தோற்கவே மாட்டாய்” என்று கடவுள் கூறினால் முதலில் எந்த தொழிலை தேர்ந்தெடுப்பேன், அதன் மூலம் வருடத்திற்கு எவ்வளவு சம்பாதிப்பேன் என ***கேட்டு எழுதிக் கொள்ளுங்கள்***.

முக்கியமான விஷயம் “பணத்திற்கு அளவே இல்லை” எவ்வளவு வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்.

உங்களுடைய மொத்த கனவும் தோற்றுப் போவதையே யோசித்துக்கொண்டு இருந்தால் எப்பொழுதும் உங்களது வாழ்க்கையில் வெற்றி பெற முடியாது. உங்களுடைய எண்ணங்களும், உணர்வுக

ளும், மொத்த வாழ்க்கையின் கவனமும், உங்கள் வாழ்க்கையின் மீதும், அதன் மதிப்பு மீதும் இருந்தால் போதும் உங்களுடைய வாழ்க்கையில் நீங்கள் செல்வந்தராக மட்டும் ஆக மாட்டீர்கள் அத்துடன் சேர்ந்து உற்சாகமானவராகவும், சந்தோஷமானவராகவும், மன நிறைவானவராகவும் நிம்மதியான வாழ்க்கையை வாழ்பவராகவும் மாறிவிடுவீர்கள்.

இதோடு சேர்த்து மதிப்பு வாய்ந்த சேவையை வழங்குபவராக மாறுகிறீர்களோ அப்போது மேலிருக்கும் அனைத்து வளங்களும் உங்கள் கண் முன்னே சாத்தியமாகும்.

இப்போதே முடிவெடுங்கள், உங்களுடைய பணக்கார வாழ்க்கை வடிவமைப்புகளை அப்படி அமைப்பதன் மூலம் என்ன கிடைக்கும் மற்றும் உங்களுடைய மொத்த பார்வையும் யோசனையும் எதில் இருந்தாலும் பரவாயில்லை முதலில் “நீங்கள் பணக்காரர் செல்வந்தர் கோடீஸ்வரர் என்று நம்புங்கள்” பிறகு சில நாட்களிலேயே நடக்கும் அற்புதத்தை பாருங்கள்.

# உங்களுடைய பிரம்மாண்ட மான ஆழ்மனதை திறக்க கற்றுக்கொள் ளுங்கள்

பணம் என்பது வெறும் ***உங்களுடைய*** நினைப்பில் மட்டும் இருந்தால் போதாது அபரிமிதமான செல்வ செழிப்பான வாழ்க்கையை வாழ்வதாகவே உணர வேண்டும். அப்போது தான் இந்த வாழ்க்கையின் இன்பமான சுவை அனைத்தும் உங்கள் நிஜ உல கில் அப்படியே உருவாகும் சூழ்நிலை அமையும்.

இந்த புத்தகத்தில் உள்ள பயிற்சிகள் அனைத்தை யும் தினமும் முயற்சி செய்தால் மட்டுமே பிரமாண் டமான வாழ்க்கை என்பது சாத்தியம். இந்த பயிற் சியை உங்கள் வாழ்க்கையின் அங்கமாக மாற்றும்

போது இது துல்லியமாக வேலை செய்வது உங்களுக்கு தெரியும்.

பணம் என்பது எண்ணங்களுடன் சேர்ந்த உணர்வு நிலை ஆகும். நீங்கள் எப்படி சந்தோஷமாக இருப்பதை உணர்வீர்கள் அதே போல் பணத்தையும் உணர்ந்து கொண்டால் பணம் கூடிய விரைவில் உங்களிடம் வர ஆரம்பிக்கும். உணர்வோடு காட்சிப்படுத்தினால் ***ஆழ்மன இயந்திரத்தை திறக்கலாம்*** இது தான் உண்மை.

## *ஆழ்மனதிலிருந்து பணத்தை அள்ள ஓர் சக்தி வாய்ந்த பயிற்சி இதோ:*

- வசதியான இடத்தில் அமைதியாக கண்களை மூடி அமர்ந்துக் கொள்ளுங்கள்.
- பொறுமையாகவும், நிதானமாகவும், அமைதியாகவும் மூச்சை ஆழமாக இழுத்து விடுங்கள்.
- முக்கியமாக இருள் சூழ்ந்த பகுதியாக இருந்தால் நன்றாக இருக்கும்.
- இப்போது உங்களுக்குள் கூறிக் கொள்ளுங்கள், எனக்குள் பிரம்மாண்டமான முடிவில்லாத ஆற்றல் இருப்பது எனக்கு நன்றாக தெரியும் அதன் மூலம் அனைத்து தத்துவங்களும் என்னுள் குவிகின்றது.
- இதை பிரம்மாண்ட ஆற்றல் தான் உருவாக்கிக் கொண்டிருக்கின்றது அதில் தான் அனைத்து வளங்களும் உள்ளது.
- நான் தெய்வீக ஆற்றல்கள் குவியும் இடமாக இருக்கின்றேன்.

- பிரபஞ்சத்தின் அளவில்லா சக்தியின் மூலம் நல்லிணக்கம், வழிகாட்டுதல், செல்வவளம் எல்லையில்லா பணம் ஆகி யவற்றை திறந்த மனதுடன் அவை அனைத்தையும் ஈர்த்துக் கொண்டிருக்கி றேன்.
- உடலின் உள்ளேயும், வெளியேயும் மேலும் மேலும் செல்வந்தனாக உணர்கி றேன், வாழ்கிறேன்.
- இப்பொழுது அளவிடமுடியாத செல் வச்செழிப்போடும், நல்லிணக்கத்தோடும் இணைந்து விட்டேன்.
- அவையனைத்தும் என்னுள்ளும் வெளிப் புறமாகவும் வெளிப்பட்டு வளர்ந்து கொண்டிருக்கின்றது.
- நன்றாக உணர முடிகிறது இந்த செல்வ வள எண்ணங்கள் அனைத்தும் என் ஆழ் மனதில் ஆழமாக பதிந்து பிரபஞ்சத்தில் பரவி இப்போது என்னிடம் நிஜ உலகில் உருவாகி வருகிறது.
- என் குடும்பத்தையும், நண்பர்களையும், உறவினர்களையும், என் வேலையாட்க ளையும் முன்னேற வேண்டுமென்று ஆசீர் வதிக்கிறேன்.
- கடவுளின் செல்வ செழிப்பையும், அள விடமுடியாத பணத்தையும், சந்தோஷத் தையும், உற்சாகத்தையும், திறந்த மனது டன் ஏற்றுக் கொள்கிறேன் மற்றும் இவை யனைத்தும் பெரும் பனிச்சறுக்கலை போன்று என் வாழ்வில் அப்படியே பெரும் பணமாக வருகின்றது.
- என் மனம் பிரமாண்டமான கட்டுக்கடங் காத பணத்தை கொடுக்கும் வழி தடமாக

இருக்கின்றது அவை இந்த இயந்திர உலகில் அப்படியே நடக்கின்றது.

- இந்த அனைத்து செல்வச்செழிப்பான வாழ்க்கையும் அப்படியே எனக்கு சில நாட்களில் கிடைக்கின்றது.

இவை அனைத்தையும் நன்றாக புரிந்துகொள்ளுங்கள், என்னவென்றால் இந்த வாக்கியத்தையும் மனதில் உருவாக்கும் கற்பனைகளையும் உங்கள் மனதிலும் உடலிலும் ஒன்றியிருக்க வேண்டும்.

நீங்கள் செய்வதை கவனிக்க ஆரம்பித்தால் அவற்றின் ஆற்றல் அதிகரித்து செல்வம் வர தொடங்கும் ஆனால் தன்னம்பிக்கையுடன் பொறுமையாக அனைத்தையும் அடையும் வரை காத்திருக்க வேண்டும்.

இங்கே கொடுக்கப்பட்டிருக்கும் பயிற்சிகளை 15 நிமிடம் தொடர்ந்து அந்தந்த வாக்கியங்களுக்கு ஏற்றபடி பயிற்சி செய்து அப்படியே இதயத்தின் மூலம் வாழ வேண்டும்.

இவை அனைத்தும் கூடிய விரைவில் அதிவேகமாக உங்களை செல்வந்தனாக மாற்றும்.

நீங்கள் இந்த வாக்கியங்கள் அனைத்தையும் தங்க ஏட்டில் எழுதுவதாக நினைத்து உங்கள் ஆழ்மனதில் பதிய வைத்தால் நிச்சயமாக பலனளிக்கும். பயன்படுத்தி தான் பாருங்கள் ஆச்சர்யப்படுவீர்கள்.